REG. No. M. 3886

20 பக்கங்கள்

# ஜன சக்தி

(சோஷியலிஸ்ட் வாரப் பத்திரிகை)

ஆசிரியர் :—ப. ஜீவானந்தன்.

| மாலை 1 | சென்னை, சனிக்கிழமை, 28—5—38 | மலர் 8 |
|---|---|---|

## சீனாவில் தேசீய ஒற்றுமை



கம்யூனிஸ்ட் கொடியும் கோமிங்டான் கொடியும் சேர்ந்து பறக்கும் காட்சி.

வருடச் சந்தா
ரூ. 3.

தனிப்பிரதி
அணா 1.

# நாகை தாலுகா விவசாயிகள் மகாநாடு

## தோழர் பி. ஸ்ரீனிவாசராவ் தலைமைப் பிரசங்கம்

—(o)—

கீவளூர், 22.

### நமது தலைவர்கள் கூறுவது சரியா ?

இன்றுள்ள எல்லா கஷ்டங்களுக்கும் நிவர்த்தி மார்க்கம், அனைவரும் கிராமங்களில் போய் பாடுபட வேண்டுமென்று நமது மாபெரும் தேசியத் தலைவர்களால் அடிக்கடி சொல்லப்பட்டு வருகிறது. மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலும், நிலத்தில் வேலை செய்து பிழைப்பவர் நெருக்கம் வளர்ந்து கொண்டே வருவதை நாம் காணலாம். 1880ம் வருஷம் வெளிவந்த ஓர் பஞ்ச கமிஷன் ரிப்போர்ட்டில் மற்ற எந்த வேலையுமின்றி "நிலத்தில் உழுது பயிரிடுவோர் தொகை எவ்வளவு வேண்டுமோ, அதற்கு மேல் அதிகமாய் இருக்கிறதென்று" வெளி வந்திருக்கிறது. அதிலிருந்து இந்தத்தொகை பெருகிக் கொண்டே வந்திருப்பதை அடியிற் காணும் புள்ளி விபரத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

| வருஷம் | 100க்கு எத்தனைபேர் |
|---|---|
| 1881 | 58 |
| 1891 | 61·06 |
| 1901 | 66-5 |
| 1911 | 72 |
| 1921 | 73 |
| 1931 | 73·9 |

இவ்விதமாக பயிரிடும் குடிகள் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போகிறது. ஆனால் பயிரிடும் நிலம் பெருகிக் கொண்டு போகவில்லை. என்பதை கவனிக்கும்போது கிராமங்களுக்கு திரும்பிப் போங்கள் என்ற கூக்குரல் வீண் கூக்குரலேயன்றி வேறொன்றுமில்லை

### பிரிட்டிஷ் சர்க்கார் நிலவரித் தந்திரம்

பிரிட்டிஷ் சர்க்காரின் இந்திய நிலவரி போக்கானது, விவசாயிகளின் செலவில் பெரிய நிலச்சுவான்களை கொழுக்க வைத்துக் கொண்டு வருகிறது. 1793ம் வருஷத்தில் வங்காளத்தில் சாஸ்வத நிலவரித்திட்டம் உற்பத்தியானதிலிருந்து பிரிட்டிஷ் சர்க்கார் பிறர் உழைப்பை கொள்ளை கொள்ளும் இந்த நிலச்சுவான்தாரித்துவத்தை வேண்டுமென்றே இந்தியாவில் வளர்த்து வருகின்றனர். இதனால் வங்காளம் ஐக்கிய மாகாணம், சென்னை மாகாணத்தின் பல பாகங்களிலும் உள்ள குடி மக்கள் பரம்பரையாக உள்ள அவர்கள் நிலம், சொத்து, சுதந்திரங்களை இழந்து தவிக்க நேரிட்டது.

பெரும்பாலோரான இந்தக் குடிமக்களுக்கு சொந்தமான நிலங்கள் சிறுபான்மையோரான மத்தியதர மனிதர்களான ஜமீன்தார்கள், தாலுக்தார்கள் போன்றவர்களிடம் 'சட்டப்படி' மாற்றப்பட்டது. இந்த சிறு கும்பலில் பெரும்பான்மையோர் மொகலாயர் காலத்தில் நிலவரி வசூலிக்கும் குடியானவர்களாகவும், சர்க்கார் அதிகாரிகளாகவும் இருந்திருப்பதாக தெரிகிறது. ஆனால் அப்பொழுது இவர்களுக்கு எந்தவித சொத்து உரிமைகளும் கிடையாது. இவர்களை பிரயோஜனப் படுத்திக்கொண்டு, பொது ஜன கிளர்ச்சியை அன்றிருந்து இன்றுவரை அடக்கி வருகின்றனர் பிரிட்டிஷ் ஏகாதிபத்யம். ஜமீன்தார்கள் தாங்கமுடியாத வரிகளைப் போட்டு குடிகளிடமிருந்து பணம் வசூலிக்கின்றனர். அதே சமயத்தில், சர்க்கார் ஜமீன்தார்களுக்கு சொற்ப வரிகளை விதித்து வசூலிக்கின்றது.

ரயத்வாரி இடங்களை எடுத்துக்கொண்டு பார்ப்போமானால் இந்தியாவில் நிலவரி ரொம்ப பளுவாய் இருக்கிறது. ரயத்வாரி மக்களில் பெரும்பாலோரான ஏழை விவசாய மக்களையே வரிப்பளு பீடிக்கிறது. நில வருமானங்களை கவனிக்காமல், நிலவரியைக் கொடுப்பவன் நிலைமையை கவனிக்காமல் எல்லா விவசாயிகளுக்கும் ஓரே விதமாக வரி வசூலிக்கப்படுவதால் ஏழை மக்கள் கஷ்டம் சகிக்க முடியவில்லை. இதன்படி, ஒரு ஏக்கரா நிலத்திற்கு குறைவாக வைத்திருக்கும் ஓர் ஏழை விவசாயி, 1000 ஏக்கரா நிலத்தை உடைய ஓர் பெரிய மிராசுதார் ஏக்கராவிற்கு கொடுக்கும் அதே எட்டு ரூபாயை கொடுக்க வேண்டியிருக்கிறது. எனவே ஏழை விவசாயிகளின் வருமானத்தை வரிமூலம் சர்க்கார் சுரண்டிவிடுகிறது. உலகத்திலேயே இந்திய விவசாயிகள்தான் பரம ஏழைகள். இப்பேர்ப்பட்ட பரம ஏழைகளிடமிருந்து தான் அளவுக்குமீறி அதிகப்படியாக வரி வசூலிக்கப்படுகிறது. இவர்களில் பெரும்பான்மையோரின் நிலவருமானம், வருஷத்தில் சில மாதங்களுக்குமேல், அவர்கள் குடும்பமும் சாதாரண வாழ்க்கை நடத்தக்கூட போதியதாறு இல்லை.

நிலவரி முறையில் மற்றோர் அநியாயம் இருக்கிறது. அதாவது வரி பணமாகத்தான் கட்ட வேண்டுமென்றிருப்பதே. இதனால் குடிமக்கள் ரொம்பவும் பாதிக்கப்படுகிறார்கள். ஒரு ஏக்கராவிற்கும் கம்மியாக உள்ள நிலமுடையோன் பயிருக்கு நாசமேற்படும் போதும், சரியாக கண்டு முதலாகாத காலங்களிலும், நெல் விலை குறைவாக இருக்கும் காலங்களிலும், வரியைக் கட்டித்தொலைக்க, கடன் பட்டுத்தீர வேண்டிய அவசிய மேற்படுகிறது. இந்தியாவில் சர்வ சாதாரணமாக மூன்று வருஷம் அல்லது நான்கு வருஷத்திற்கு ஓர் முறை இந்த கஷ்டங்களை ஏழை விவசாயிகள் "தரிசிக்க" நேரிடுகிறது. இதனால் லேவாதேவிக்காரர்களிடம் கடன்பட்டு அவஸ்தைப்பட்டு வருகின்றனர். 1929ம் வருஷத்திலிருந்து 1933ம் வருஷம் வரை நெல் விலை சுமார் ½ பங்கு குறைந்திருந்த காலத்தில், நிலவரி சிறிதுதான் குறைக்கப்பட்டது. இதிலிருந்து என்ன தெரிகிறது ? நிலவரி கொடுமைக்கும் வசூல் முறை நிர்ப்பந்தத்திற்கும் உலகிலேயே இந்தியச் சர்க்கார்தான் முதற் பரிசு பெற்றிருக்கிறது. 10 வருடத்திற்கு ஓர் முறை ஏற்படும் புதிய நிலவரி நிர்ணயம் எவ்வளவு அதிகப்பட்டுக்கொண்டே போகிறதென்பதை கீழே குறிப்பிடும் விஷயத்திலிருந்து கண்டு கொள்ளலாம். 1860-ம் வருடம் நிலவரி 21 கோடி ரூபாய். இன்று 32 கோடி ரூபாய். பிரிட்டிஷ் இந்திய விவசாய மக்கள் கடன் 1500 கோடி ரூபாய். நமது மாகாணத்தில் 200 கோடி ரூபாய் கடன் மதிப்பு இருக்குமென்று திரு. சத்தியநாதன் அறிக்கை கூறுகிறது.

### கடன் நிவாரணச் சட்டமும் ஏழை மக்களும்

நமது சென்னை மாகாணத்தில் பெரும்பான்மை குடியான மக்கள் தற்குறிகளாய் இருப்பதால், கடன் நிவாரணச் சட்டம் அவர்களுக்கு ஓர் அளவிற்குக் கூட நன்மை செய்யவில்லை. ஏனெனில், 3 வருடற்திற்கு ஓர் முறை பழைய பிராமிசரி நோட்டுகளை புதிதாக எழுதிக் கொடுத்து வரும் நமது ஏழை படிப்பில்லாத லக்ஷக்கணக்கான மக்கள் எந்தக் கோர்ட்டிலும் தனது கடன் 1932-ம் வருடத்திற்குமுன் இருந்தே இருக்கிறதென்று நிரூபிக்க மார்க்கமில்லாமலிருக்கிறது. எனவே, இன்று ஏற்பட்டுள்ள சட்டம் அவர்களுக்கு நன்மையை உண்டாக்கவில்லை.

பெரிய கடன் பிரச்சினையை தீர்க்க 50 லக்ஷ ரூபாய் வசதி அளிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்தே இந்த கடன் பிரச்சினையைப் பற்றி சரிவர நமது தலைவர்கள் தெரிந்துகொள்ளவில்லை என்று தெரியவருகிறது. கோர்ட்டில் கடனை வசூலிக்க எந்தெந்த வழிகளுண்டோ அவைகளெல்லாம் பிரதி தினம் பெருகிக் கொண்டே போகிறது. இதனால் இன்னும் பலர் நிலமில்லாது போவதை தடுக்க நமது மந்திரிகள் என்ன நடவடிக்கைகள் எடுக்கப் போகிறார்களோ நமக்கு தெரியவில்லை.

### நமது மந்திரிகள் கவனிப்பார்களா ?

இந்த வருஷமும் ரூ. 7500000 நிலவரி தள்ளிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நாம் ஏற்கனவே இருந்த மந்திரி சபைகளை 100-க்கு 25 பங்கு வரி தள்ளிக் கொடுக்காததால் கண்டித்து வந்தோம். ஆனால் இன்று நமது மந்திரிகளும், வரவு செலவு கணக்கை சரிக்கட்டும் பாடத்தையே கூறுகிறார்கள்.

காங்கிரஸ் மந்திரி சபையில்லாத அஸ்ஸாம் மாகாணத்தில், காங்கிரஸ் கக்ஷி 100-க்கு 50 பங்கு நிலவரி தள்ளிக்கொடுக்க வேண்டுமென்று கோரியது. சர்க்காரே 25 பங்கு வரி தள்ளிக் கொடுக்க முன்வந்தது. இறுதியில் 100-க்கு 33 1/3 பங்கு வரி தள்ளிச்கொடுக்க சர்க்கார் ஒத்துக்கொண்டது.

15 லக்ஷ ரூபாய் நீர்ப்பாஸன வசதிக்காக ஒதுக்கப்பட்டிருப்பதைக் கண்டு, நமது மந்திரிசபையை பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். 10 கோடி ரூபாய் நிலவரி வசூல் செய்யும் பஞ்சாப் மாகாணத்தில், பிரதம மந்திரி சிக்கந்தர் ஹைதகான் 50 லக்ஷ ரூபாய் நீர்ப்பாஸனத்திற்காக ஒதுக்கி வைத்திருக்கிறார். சுமார் 16 கோடி ரூபாய் நிலவரி வசூலாகும் நமது சென்னை மாகாணத்தில் 15 லக்ஷ ரூபாய் தான் ஒதுக்கி வைக்கப் பட்டிருக்கிறது! இதை நமது மந்திரிகள் கவனிப்பார்களா?

(19-ம் பக்கம் பார்க்க)

# காங்கிரசைப் பலப்படுத்தும் வேலை

## இளைஞர்களின் பொறுப்பு

(ஏ. ஜி. வெங்கிடாச்சாரி)

அடுத்துவரும் மாதங்கள் தேசிய விடுதலைப் போராட்டத்தின் போக்கை உருவாக்குவதில் மிகவும் முக்கியமானவை என்பதை ஒவ்வொரு காங்கிரஸ்காரனும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது கடமை. சில கிணற்றுத் தவளைகள் பிரிட்டனின் ஸர்வதேச சங்கடங்களுக்கும் நம்முடைய சுதந்திரப் போருக்கும் சம்பந்தமில்லை யென்று கூச்சலிடலாம். ஆனால், தீர்க்கதரிசியான எவரும் சரித்திர திருஷ்டியுள்ள எவரும் இந்த வாதத்தை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஸர்வதேச நெருக்கடி வலுத்து வருகிறது. உலக மெங்கும் வியாபித்துள்ள பிரிட்டிஷ் ஏகாதிபத்திய உரிமைகளும் ஏகபோகங்களும் நீடித்து நிலைபெற்றிருப்பது சாத்தியமல்ல. பிரிட்டனுடைய கஷ்டங்கள்தான் நம்முடைய சந்தர்ப்பங்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு தொல்லைகள் பரவி வரும் தருணத்தில் தான் நாம் நமது போராட்டத்தை பலப்படுத்தி சுதந்திரத்தை சம்பாதித்துக்கொள்ள வேண்டும். ஆனால் இது மிகவும் சுலபமான வேலை என்று கருதிவிட முடியாது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எளிதில் எந்தப் பிடிப்பையும் விட்டுக் கொடுக்காது. வேறு வழியில்லை என்று புலப்பட்டாலொழிய சமரஸத்துக்கு வர ஏகாதிபத்தியங்கள் இணங்க மாட்டா. காலனிகளை—முக்கியமாக இந்தியாவை—ஒட்டாண்டியாக்கி 36 கோடி மக்களை சுரண்டிப் பிழைக்கும் முறை பத்திரமாய் இருந்தால் தான் ஏகாதிபத்தியம் நிலைத்திருக்கும். எனவே, உலகில் எது என்னவாயினும் இந்தியாவை இடை விடாமல் சுரண்டுவதற்கு எவ்விதமான இடையூறும் ஏற்படலாகாது என்பதில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு சிரத்தையுண்டு. அந்த ஏகாதிபத்தியத்தின் குடை நிழலின் கீழிருந்து கொண்டு, சுய நலத்திற்காக நாட்டின் அடிமை வாழ்வு நீடிப்பதற்கு உதவிபுரியும் பேமானிகளுக்குக் குறைவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து காங்கிரஸ் போரிட்ட காலையில் இந்தத் துரோகிகள் கட்டுப்பாடாக போராட்டத்துக்கு உலை வைத்தனர். பட்டம் பதவிகளுக்காக நாட்டைக் காட்டிக் கொடுத்தனர். ஆனால், போராட்டத்தின் சக்தி, பாமர மக்களின் ஆதரவுடன் வளர்ந்தோங்கி வந்ததால் பாசிரமஜீவிகளும், சுயநலமிகளும், பதவி வேட்டைக்காரர்களுமடங்கிய இந்தக் குழாங்களின் வேலை பூர்ணமாகப் பலிக்கவில்லை. ஆனால், இவர்களுக்கு புத்தி கூர்மையோ சாமர்த்தியமோ குறைவாயில்லை. சமயத்திற்குத் தகுந்தவாறு காற்றூடிபோல் நடிப்பவர்கள். எனவே, காங்கிரஸ் சட்ட பூர்வமான பார்லிமெண்டரி போராட்டத்தில் இறங்கியவுடன், இவர்களில் பெரும்பான்மையோர் திடீரென பழுத்த தேச பக்தர்களாக மாறிவிட்டனர். ஸ்தல ஸ்தாபனங்களை கைப்பற்றி தம் ஆதிக்கத்தை செலுத்துவதற்கு காங்கிரஸை அவர்களில் பலர் ஒரு உபயோகமான கருவியாக வைத்துக் கொண்டுள்ளனர் என்பது வெளிப்படை. உண்மையான மனமாற்றத்துடன் பலர் புதிதாக காங்கிரஸுக்கு வந்திருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், சமயோசித வாதிகள் பெரும்பான்மையும் வந்துவிட்டிருக்கிறார்கள். இவர்கள் ஸ்தல ஸ்தாபனங்களில் மட்டுமின்றி காங்கிரஸ் ஸ்தாபனங்கள் பலவற்றிலும் இடம் பெற்றிருப்பது மிகவும் கவலைக்கிடமான விஷயம். இவர்களுடைய மனோ நிலையும் விடுதலை ஆர்வமும் வெறும் வெளிப்பகட்டுத்தான். முக்கியமான போராட்டம் வருங்காலையில் இவர்கள் தங்கள் சுயரூபத்தில் வெளிவருவது திண்ணம். ஆனால், அதுவரை அவர்களை அந்தப் பதவிகளில்—முக்கியமாக காங்கிரஸ் ஸ்தாபனங்களின் நிர்வாகப் பதவிகளில்—விட்டு வைத்தால் போராட்டத்தை வெற்றிகரமாய் நடத்துவதற்கு வேண்டிய நிலைமையில் ஸ்தாபனத்தை அவர்கள் ஒழுங்காய் வைத்திருக்கப் போவதில்லை. எனவே, அவர்களை முதலில் அந்த இடங்களிலிருந்து விரட்டவேண்டும். ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும், அது எவ்வளவு சின்னஞ் சிறுதாயிருந்தபோதிலும், புரட்சிக் கிரணங்கள் நாற்புறமும் வீசும் மகத்தான ஸ்தாபனமாய், தியாகத்துக்கு உறைவிடமாய் உருவாக்க வேண்டும். அப்படியிருந்தால்தான் நம்மை சாசுவத அடிமைகளாக்குவதற்கு சிருஷ்டிக்கப்பட்டுள்ள சமஷ்டியை அடியோடு தகர்க்க முடியும். இந்த ஸ்தாபனங்கள் அத்தகைய பலம் பெறுவது எப்படி ?

(1) தொழிலாளர்களையும் கிருஷிகர்களையும் ஏராளமாக காங்கிரஸில் சேர்த்து அவர்களுடைய தினசரிப் போராட்டங்களில் காங்கிரஸ் கமிட்டிகள் முக்கியமாய் கவனம் செலுத்துவது.

(2) படித்து வேலையில்லாமல் தவிக்கும் இளைஞர்கள் தொழிலாளரிடையே கட்டுப்பாடான ஸ்தாபனங்களை அமைக்க உதவி செய்து அவற்றைச் சரிவர நடத்தி விடுதலைப் போருக்கு உகந்த புரட்சிஸ்தாபனங்களாக அவற்றை மாற்றுதல்.

இந்த இரண்டின் மூலந்தான் காங்கிரஸை உண்மையிலே பலப்படுத்த முடியும்.

தொழிலாளரில் மிகப்பெரும்பான்மையோரை இன்னும் ஸ்தாபனங்களில் சேர்த்து அவர்களுக்கு வர்க்க உணர்ச்சியை மட்டுமின்றி, தேசியவிடுதலை உணர்ச்சியையும் ஏற்படுத்தும் மகத்தான வேலை பாக்கியாயிருக்கிறது. அதைச் செய்து முடிக்க உண்மையுணர்ச்சியும், சோம்பலின்றி உழைக்கும் திறனும் படைத்த வாலிபர்கள் ஏராளமாகத் தேவை. உழைக்கும் உழைப்பாளர்களின் வாழ்க்கை ஜீவனத்திற்கு வசதி செய்து தர எந்தத்தொழிலாளர் ஸ்தாபனமும் மறுக்காது. எனவே, இந்தத் துறையில் வேலை செய்ய படித்த இளைஞர்கள் முன் வரவேண்டும். கிராம காங்கிரஸ் கமிட்டி முதல் எல்லா கமிட்டிகளிலும் காங்கிரஸ் வேலை சரிவர நடைபெறுமாறு பார்த்துக்கொண்டு ஜனங்களிடையே புரட்சி மனப்பான்மையை ஏற்படுத்தும் பொறுப்பை இளைஞர்கள்தான் ஏற்றுக்கொள்ளவேண்டும். அதற்கு முதற்படியாக, காங்கிரஸில் அங்கத்தினர்களைச் சேர்க்கும் வேலையில் அவர்கள் மும்முரமாய் இறங்க வேண்டும். பரிபூர்ண சுதந்திரத்தில் மட்டுமின்றி பொருளாதார சுதந்திரத்திலும் நாட்டமுள்ளவர்களாகவும், அதற்காக தியாகம் செய்யத் தயாராயிருப்பவர்களுமாகப் பார்த்து லக்ஷக் கணக்கில் சேர்ப்போம். சுயநலக் கும்பல்களையும், சமய சஞ்சீவிகளையும் விரட்டுவோம். ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரை பலப்படுத்துவோம்.

—:o:—

ஜன சக்தி

சென்னை, 28—5—'38.

# ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை

இது வரை தீராமலிருந்த ஹிந்து முஸ்லீம் பிரச்னையை தீர்க்க தற்பொழுது காங்கிரஸ் அதிக ஊக்கமெடுத்து வருவது போற்றத் தக்கது. முன் போல இந்த முக்கிய பிரச்னையின்பால் சரியான கவனம் செலுத்தாமல் இனி இருக்க முடியாது. அதோடு 7 மாகாணங்களில் இன்று காங்கிரஸ் மந்திரிப்பதவி வகித்திருப்பதால், இதனை உடனடியாகத் தீர்க்க வேண்டிய அவசிய மேற்படுகிறது. சமஷ்டியை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் நம் மீது சுமத்த விரும்பும் இச் சந்தர்ப்பத்தில், ஹிந்து முஸ்லீம் பிரச்னை முக்கிய தசையை அடைந்துள்ளது.

இதை தீர்க்க முயற்சிக்கும் இது சமயம் இன்று மாறுபட்டு இருக்கும் நிலைமைகளையும் நாம் கவனிக்கவேண்டும். 10 மாதங்களுக்கு முன் காங்கிரஸ் மந்திரிப் பதவியை ஏற்றுக் கொண்டது. இதுவரை காங்கிரஸ் மந்திரி சபைகள் செய்த காரியங்கள் பொதுவாக திருப்தியை அளிக்கக் கூடியவையாயிருக்கின்றன. இதற்கு முன் பதவியிலிருந்தோர் உதாசீனம் செய்து வந்த முக்கிய விஷயங்களான தொழிலாளர் விவசாயிகள் பிரச்னைகளை இன்று காங்கிரஸ் தீர்க்க முயற்சிகள் எடுத்து வருவதை பொது மக்கள் கண்டு அவர்களிடையே ஓர்வித நம்பிக்கையும், விடுதலை உணர்ச்சியும், வளர ஆரம்பித்திருக்கிறது. பிரஜா உரிமைகள் ஓர் அளவிற்கு வளர்ந்திருக்கின்றன. முன்னைய அடக்கு முறைகள் தளர்த்தப்பட்டு வருகின்றன. காங்கிரஸ் ஜனங்களிடம் புது நம்பிக்கையை கிளப்பி விட்டிருக்கிறது.

இதோடு முஸ்லீம் பொது மக்களும் மென்மேலும் காங்கிரஸிடம் நம்பிக்கை கொண்டு வருகிறார்கள். 'முஸ்லீம் பொதுமக்கள் தொடர்பு கமிட்டி' முஸ்லீம் மக்களிடையே அருமையான வேலை செய்திருக்கிறது. மேலும் வளர்ந்து வரும் சோஷியலிஸ்டு இயக்கமும் முஸ்லீம் மக்களிடம் உருப்படியான வேலை செய்துவருகின்றது. சோஷியலிஸ்டு நோக்கங்களைக் கொண்ட தொழிலாளர் இயக்கமும் முன்னேறிச் செல்கின்றது. இதில் வகுப்புச் சண்டைகளுக்கே இடமில்லை. ஆனபடியால், இவ் வியக்கம் முஸ்லீம் லீக்கிலிருக்கும் பிற்போக்காளரான வகுப்புவாதிகளின் செல்வாக்கை தகர்த்தெறிந்து வருகிறது. முஸ்லிம் பொதுமக்களின் ஆதரவற்று முஸ்லீம் லீக் வெறும் பணக்காரர்கள், ஜமீன்தார்கள் நிறைந்த ஓர் சபையாக விளங்குகின்றது. ஆனல் சமீபகாலம் முதல், முஸ்லீம் மக்களிடையே வளர்ந்துவரும் சுதந்திர உணர்ச்சியின் காரணமாய், லீக் தலைவர்களும் வாயளவில் தேசிய விடுதலையைப்பற்றி பேசவும் ஆரம்பித்துவிட்டனர். தங்கள் மகாநாட்டில் சமஷ்டியை எதிர்த்தும், நாட்டின் பூரண சுதந்திரத்தை விரும்பியும் தீர்மானம் செய்துள்ளனர். இந்த விஷயங்களில் ஒற்றுமை ஏற்பட ஓர் சந்தர்ப்பம் காணப்படுகின்றது. எனவே, சமஷ்டியை எதிர்த்து நடத்தும் நமது போராட்டத்தில் முஸ்லீம் லீக்கையும் கொண்டுவர முயற்சிக்க வேண்டும். இம்முயற்சி, நாட்டின் பூர்ண சுதந்திரப் போராட்டத்தின் ஓர் பாகமுமாகும்.

பம்பாயில் நடைபெற்ற போஸ்-ஜின்னு பேச்சுகள் திருப்திகர மற்றதாக முடிந்தன. ஜின்னு கோரிக்கைகள், குறிப்பாக ஹிந்துக்கள் சார்பாக காங்கிரஸ் உறுதி கூற வேண்டுமென்பதை, தேசீய காங்கிரஸ் ஒருநாளும் அங்கீகரிக்க முடியாது. ஜின்னுவும் மற்ற லீக் தலைவர்களும் என்னதான் கூறியபோதிலும், இந்திய தேசீய காங்கிரஸ், எல்லா வர்க்க வகுப்பு மெம்பர்களையும் கொண்ட ஓர் தேசீய ஸ்தாபனமாகும். இந்திய மக்களின், இந்திய நாட்டின் சுதந்திரத்திற்காக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு போராட முனைந்து நிற்கும் ஸ்தாபனமாகும். தேசீய காங்கிரஸ் ஹிந்து மகாசபையோ, இந்திய கிருஸ்தவர்கள் சபையோ அல்ல. எனவே, ஜின்னுவின் கோரிக்கையை தேசீய காங்கிரஸ் அங்கீகரிக்க முடியாது.

வர்க்கப் போராட்டத்தில் நம்பிக்கை உள்ள நாம், இந்த மாதிரி இப் பிரச்னையைப் பார்க்க முடியாது. முக்கியமாக, எந்த மதத்தைச் சார்ந்தவர்களாயிருந்தாலும், மேல் வகுப்பார்களின் ஆதிக்கத்தில் அவதியுறும் பொது மக்களின் போராட்டத்தில் நாம் கண்ணுங் கருத்துமாய் இருக்கிறோம். பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தினிடமிருந்து விடுதலையும் சுதந்திரமும் இந்த நாட்டிற்கு முதல் தேவை. இன்று கான்பூர் தொழிலாளர் வேலை நிறுத்தத்தில், முஸ்லீம் லீக்கும் தொழிலாளர்களுடன் சேர்ந்து பாடுபட்டு வருவதை இங்கு நாம் மகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறோம். சிலகாலத்திற்கு முன்வரை அவர்கள் ஒதுங்கியே யிருந்தார்கள்.

இந்திய மக்களின்மீது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் சமஷ்டியை திணிக்க முடியாதவண்ணம் காங்கிரஸுடன் முஸ்லீம் லீக்கும் சேர்ந்து பாடுபடவேண்டு மென்று நாம் விரும்புகிறோம். நமது நாட்டின் சுதந்திரப் போராட்டம் முன் நோக்கிச் செல்வதற்கு எவ்வளவு சடுதியில் முஸ்லீம் லீக் இந்திய தேசீய காங்கிரஸ் ஓர் தேசீய சபை என்பதை அங்கீகரிக்கிறதோ, அவ்வளவு அதிகம் நன்மையாகும். பிற்போக்கான ஜமீன்தார்களுடன் சேர்ந்துழைப்பதால், முஸ்லீம் பொதுமக்களுக்கு எந்தவித நன்மையுமில்லை. இதை முஸ்லீம் மக்கள் ஏற்கனவே கண்டு கொண்டனர். இதையே கான்பூர், பம்பாய் மற்றுமிடங்களிலும், முஸ்லீம் தொழிலாளர்கள் ஹிந்து தொழிலாளர்களுடன் தோளோடு தோள் நின்று தங்கள் நிலைமையைச் சீர்ப்படுத்தப் போராடும் போராட்டத்தில் காண்கின்றோம்.

இதிலிருந்து பாட்டாளிப் பொதுமக்களுக்கு, (இந்துவாயினும் முஸ்லீமாயினும்) வகுப்புவாதம் என்பது கிஞ்சிற்றும் கிடையாது என்பது நன்கு விளங்குகிறது.

# வெளிநாட்டு - உள்நாட்டுச் செய்திகள்

## செக்கோஸ்லோவாக்கியாவும் பாஸிஸமும்

செக்கோஸ்லாவாக்கியா ஜெர்மனிக்கு கிழக்கிலுள்ளது. அங்கு ஜனநாயக ஆட்சி சென்ற பதினெட்டு வருஷங்களாக நடந்து வருகின்றது. அதனது ஜனத்தொகையில் ஜெர்மனியர், 'செக்ஸ்,' 'க்ரோட்ஸ்' ஸ்லாவாக் என்ற பல வகுப்பினர்களிருக்கின்றனர். பாஸிஸ்ட் பேய் கிளம்பி, தலைவிரித்தாடியவுடன் ஜெர்மனியர்கள் மேற்கண்ட ஆட்சியில் இருக்க முடியாது, என்று கதறுகின்றனர். எங்களது "ஜெர்மானியர்கள், ஒன்றுபட்டு இருக்கவேண்டும்" வேறு ஆட்சியின்கீழ் இருக்க முடியாது என்று ஹிட்லர் கூட்டத்தார் கர்ஜித்து, செக்கோஸ்லாவாக்கிய ஜன நாயகத்தையும் விழுங்கிவிட முயற்சி செய்கின்றனர். ஆனால் ஸோவியத் நாடுகளும், பிரெஞ்சு அரசாங்கமும், தங்கள் உடன்படிக்கைகளின்படி செக்கோஸ்லவாக்கியாவைக் காப்பதற்கு வேண்டிய உதவிபுரிய கடமைப் பட்டவர்கள். பிரிட்டிஷ் அர்சாங்கமும் கடமைப் பட்டதேயானாலும் சென்ற சில காலங்களாக அது பாஸிஸ்ட் பயமுறுத்தலுக் கிணங்கி வருகின்றது.

சென்ற ஞாயிற்றுக்கிழமை செக்கோஸ்லாவாகியாவில் ஸ்தல ஸ்தாபன தேர்தல்கள் ஆரம்பித்தன. இன்னும் 2, 3, ஞாயிற்றுக் கிழமைகளிலும் அவைகள் நடைபெறும். தேர்தல் காலங்களில் கலகமும் கிளர்ச்சியும் அதிகரிக்கச் செய்து, 'சமாதானத்தை நிலை நிறுத்தி தமது இனத்தாரைப் பாதுகாப்பது' என்ற பெயரால் ஜனநாயகத்தை ஒழித்து, பிரஜா உரிமைகளைப் பிடுங்குவது ஹிட்லரின் வழக்கம். இம்மாதிரி நாடகத்தைத் தான் நேற்று ஆஸ்திரியாவில் பார்த்தோம்.

இதை உத்தேசித்தே ஜெர்மனியப் படைகள் செக்கோஸ்லாவாக்கியாவின் மேற்கு எல்லைகளில் சென்ற வாரம் திரட்டப்பட்டன. 'ஸுடெட்டன் ஜெர்மன்' எனப்படும் ஜெர்மானியர்கள் இருக்கும் ஊர்களில் சிறு சச்சரவுகள் ஏற்பட்டன. இந்த கலகத்துக்கெல்லாம் காரணம், ஜெர்மன் பாஸிஸத்தின் ஏஜெண்டு, ஹென்லேன் என்பவர் ஆஸ்திரியாவில் ஸைஸ் இன்கார்ட் என்றவரைப் போல், பாஸிஸத்துடன் ஜெர்மானிய மக்களைக் கட்டிவிட, இவ்வித ஜாதி வித்தியாசப் பிரசாரம் செய்கின்றார்.

தேர்தல்களுக்கு இரண்டுநாட்களுக்கு முன்னர் இரண்டு ஜெர்மானியர்கள் இராணுவ ஆக்ஞையை மீறியதால் சுடப்பட்டனர். உடனே கிளம்பிவிட்டது ஹிட்லர் முழக்கம். ஏற்கனவே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் பிரெஞ்சு அரசாங்கமும், செக்கஸ்லோவாகியாவிலுள்ள ஜெர்மானியர்களுக்குச் சில சவுகர்யங்கள் கொடுக்க வேண்டுமென்றனர். இன்னும் விரட்டலாமெனப் பார்க்கின்றது ஜர்மன் பாஸிஸம். விரட்டி ஒன்றும் நடவாவிட்டால், வழி இருக்கவே இருக்கின்றது. ஆனால் பிரிட்டிஷ், பிரஞ்சு கவர்ன்மெண்டாரும் இச்சமயத்தில் ஆஸ்திரியாவைச் சாப்பிட முன்விட்டபடி விடமாட்டார்களெனத் தோன்றுகிறது.

பொது ஜனங்கள் இரு தேசங்களிலும் கண்விழித்துக்கொண்டிருக்கின்றனர். ஆகவே இங்கிலாந்தும், பிரான்சும் நேற்று ஆஸ்திரியா, ஸ்பெயினை ஏமாற்றியது போல், செக்கோஸ்லோவாக்கியாவையும் ஏமாற்றுவது சுலபமல்ல. மேலும் ஸோவியத் நாடுகளில் "பாசிஸ்ட் வலுச்சண்டையர்கள்; என்ன சௌகர்யங்களை ஜெர்மானியருக்குக் கொடுத்தாலும் விரட்டாமலிருக்கமாட்டார்கள். யுத்தத்தை நிறுத்துவதற்கு வழி ஒன்றே. பாஸிஸ்ட் சண்டைக்காரர்கள் ஐரோப்பாவின் சமாதானத்தின் கடைக்கோடியாகிய செக்கோஸ்லோவாக்கியாவைக் காவு பெற்றுக்கொள்ள மாட்டார்களென்ற உறுதியான எச்சரிக்கையே" (இஸ்வெஸ்டியர் பத்திரிகை)

நடுவில் எல்லைச் சச்சரவுகள் அதிகரித்து விட்டன. செக் கவர்ன்மெண்டாருக்கு ஹிட்லரிடமிருந்து ஆக்ஷேபனை மீது ஆக்ஷேபனை வருகின்றது. பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் "பார்வையாட்கள்" (Observer) அனுப்ப வேண்டுமென்று ஜெர்மனியப் பத்திரிகைகள் கூறுகின்றன.

இங்கிலையில் பொது ஜனங்கள் பாஸிஸ்ட் எதிர்ப்பை வலுபடுத்தி, முதலாளித்வ கவர்ன்மென்டுகளில் உள்ள உரிமைகளைக் காப்பாற்றி, ஜன நாயகப் பாதுகாப்புப் போரில் ஐக்கிய முன்னணியை வலுப்படுத்தி மக்களின் சுதந்திரப் போரில் முன்னேறவேண்டுவது அவசியம்.

## பிரிட்டிஷ் மந்திரி சபை மாறுதல்கள்

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உலக யுத்தத்திற்கு விரைவுடன் தயாராய் வருகின்றதை பிரிட்டிஷ் மந்திரிசபை மாறுதல்களில் காணலாம். ஏற்கனவே யுத்த காலத்தில் சாப்பாட்டு சாமான்கள் பங்கீடு செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தாய் விட்டன. 'காஸ்மூடிகள்' (Gas Mosques) அனைவருக்கும் சப்ளை செய்யவும் ஏற்பாடாய்விட்டது. பிரிட்டிஷ் ஆகாயப் படை மற்றைய தேசத்தியப் படைகளை விடப் பெரிதாக்க முயற்சிகள் சென்ற 2 வருஷங்களாக நடக்கின்றன. ஆகாயப் படை மந்திரி ஸ்விண்டன் பிரபு சென்ற வாரத்தில் ராஜினாமா செய்து விட்டார். அவர் செய்த வேலையின் ஒழுங்கும் துரிதமும் போதாதென நெடு நாளாய் நடந்த கூச்சல் அதிகரித்துவிட்டது.

பிரிட்டிஷ் ராணுவத்துக்கு வேண்டிய மருந்தும்; உணவு சாமான்களும், தயார்செய்த ஸர் கிங்கஸலி வுட் அந்த ஸ்தானத்துக்கு வந்திருக்கின்றார்.

பார்லிமெண்டில் இதைப் பற்றி நடந்த வாதத்தில், "உலகத்திலுள்ள சண்டைப் படைகளுடன் மிகவும் உயர்வானதும், தோற்கடிக்க முடியாததும் என்று பிரிட்டிஷ் ஆகாய விமானப்படை" என்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி மார் தட்டினார். தற்காலத்தியப்படையளவு 1750 இன்னும் துரிதமாய் அதிகரிக்கும் இப்படை.

இங்கிலாந்தில் மேர்படி படைக்கு ஆட்களைத் தயார் செய்ய 11 டிரெயினிங் ஸ்கூல்களும், 22 தொண்டர்கள் மத்திய சபையையும் உள்ளன. 1000 ஆகாய விமானச் சாரதிகள் தயாராகின்றனராம்.

இவ் வேலையில் அமெரிக்கா தேசத்து ஆகாய விமானக் கம்பெனியார் உதவி புரிகின்றனர். தவிர இங்கிலாந்திலுள்ள பெரும் தொழிலதிபதிகளெல்லாம் உதவி புரிவாரென ஸர் கிங்சஸலி வுட் கூறினார்.

யுத்தமும், யுத்த ஆயத்தமும் யாருக்கு வேட்டை என்பதை யாவரும் அறியலாம்.

## உதகமண்டலத்தில் காங்கிரஸ் கொடி

உதகமண்டல ஜில்லா மாஜிஸ்திரேட் மனட்டி என்ற ஊரில், கனம் கிரி ஏற்றிய காங்கிரஸ் கொடியைச் சிலர் ஒடித்து விட்டபடியால் மறுபடி அதை ஏற்றக் கூடாதென்று சொல்லி விட்டார். காரணம் மேற்படி ஊரில் போலீசார் விசாரித்ததில் பழையபடி கொடி ஏற்றினால் கலகம் உண்டாய் விடுமென்பதாம். அப்படியானால் கொடியை முதலில் இறக்கியவர்கள் யார்? ஏன் அவர்கள் தேசியக்கொடியை அவமதித்தார்களென்று விசாரிக்க மாட்டார்களா?

காங்கிரஸ் கமிட்டி பிரதம மந்திரிக்கு தந்தி யடித்திருக்கின்றது.

## இங்கிலாந்துக்கு டெபூடேஷன் கூடாது

ராஷ்டிரபதி போஸ் பம்பாயில் சில பத்திரிகைக்காரர்களுக்குக் கொடுத்த ஒரு பேட்டியில் தனி மாகாண ஏற்பாடுக் கென்று இங்கிலாந்துக்கு ஒரு வேண்டுகோள் செய்வதற்கு, டெபூடேஷன் கூடாதென்று கூறினார். நமது நாட்டிலேயே நாம் வேண்டிய சக்தி பெறும் வரையில் தனி மாகாணத்திற்குப் பிரசாரமெல்லாம் ஜனங்களை ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரை தயார் செய்வதிலேயே கருத்தாய் இருத்தல் வேண்டும்.

## ஸிந்து மாகாணத்தில் வரிகொடா இயக்கம்?

ஹைதராபாத் டிவிஷன் டண்டோவில் 10,000 கிருஷிகர்கள் இவ்வருஷத்திய நிலவரியைக் கொடுக்க மறுக்கின்றனர். ஸிந்து மாகாண கவர்ன்மெண்டார் விவசாயப் பொருள்களின் விலை குறைவிற்கிணங்க வரி குறைத்தால்தான் வரி கொடுப்பார்களாம்.

அஸெம்பிளி காங்கிரஸ் சபை இதைப்பற்றிப் பேச ஒரு அவசர பிரேரேணைக் கொண்டுவரப் போகின்றதென அறிகின்றோம்.

## கான்பூரில் பிரஜா உரிமை

கான்பூர் முதலாளிகள் சங்கத்திற்குத் திடீரெனப் பிரஜா உரிமை ஞானம் பிறந்துவிட்டது. ஸ்ட்ரைக் செய்வதில் கான்பூரிலுள்ள தொழிலாளர் பெண்மணிகள் பலர் மறியல் செய்ய வாரம்பித்து விட்டனர்.

கான்பூர் முதலாளிகளுக்கு மறியல் செய்வது தவறும். அதனால் வேலை செய்ய இஷ்டப்படுபவர்களின் உரிமைகள் போய்விடுகின்றதாம். ஆதலால் ஐ. மா. கவர்ன்மெண்டார் மறியலை நிறுத்த வேண்டுமாம்.

தொழிலாளர்களுக்கு உரிமை உண்டென முதலாளிகளுக்குத் தெரிகிறது போலும்! தொழிலாளர்களின் முதல் உரிமையும் முக்கிய உரிமையும் அவசியமான சமயம் ஸ்ட்ரைக் செய்யும் உரிமையே. காங்கிரஸூம், காங்கிரஸ் மந்திரி சபைகளும் இவ்வுரிமையை முதலாளிகள் முதலில் உணர்ந்து, அதை அங்கீகரிக்கக் கட்டாயப்படுத்துவார்களென நம்புகின்றோம்.

---

# கல்கத்தா எலக்டிரிக் சப்ளைக் கம்பெனிக்கு கொள்ளை லாபம்

## தொழிலாளர் இயக்கம் பற்றி மாஜி கவர்னர்

சென்னையிலுள்ள எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனி மட்டும் பிரிட்டிஷ் முதலாளிகளின் சொத்தல்ல. வங்காள மாகாணத்தின் முக்கியப் பட்டணமும், இந்திய பட்டணமுமான கல்கத்தாவின், எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனியும் பிரிட்டிஷ் முதலாளிகளுக்குச் சொந்தம். பிரிட்டிஷ் முதலாளித்துவம் இந்தியாவில் பலவித உரிமைகளை நன்கு ஏற்படுத்திக்கொண்டு அவ்வுரிமைகளை பிரிட்டிஷ் அரசாங்க சட்டதிட்டங்களைக் கொண்டு பாதுகாக்கப்பெற்று இந்திய மக்களைச் சுரண்டுகின்றது. இச்சுரண்டலுக்கும் சுரண்டலின் சட்ட ஆதரவுக்கும் அத்தாக்ஷி தற்போது நடக்கும் பல விஷயங்களில் காணலாம். சுரண்டலால் அதிகமாய் கஷ்டப்படும் தொழிலாளிகள் இயக்கம் அபிவிருத்தி யடையும் போக்கிலேயே, முதலாளித்வத்தின் பல அநீதிகள் பொது ஜனங்களுக்கு வெளியாகின்றன.

### பிரிட்டிஷ் முதலாளித்வம்

தற்காலத்திய, ஏகாதிபத்ய காலத்தில் முதலாளித்வத்தின் முக்கிய விசேஷம், ஜாயின்ட் ஸ்டாக் (Joint Stock) அல்லது லிமிடெட் கம்பெனி தொழில் நடத்தப்படுவதே. இதன் மூலம் சிறுபான்மையோரான "பண முதலாளிகள்" (Finance Capitalists) சமூகத்தின் பல தொழில்களை தமது வசப்படுத்தி ஆளுகின்றனர். பிரிட்டிஷ் முதலாளித்வத்தின் வலுவான அஸ்திவாரம் பவுன் பங்குகளென ஒரு பெருளாதார சாஸ்திரி கூறினார். இச்சிறு பங்காளிகள் பல விடங்களிலிருப்பதாலும், கம்பெனி நடத்துவதில் உண்மையில் ஒருவித சக்தியும் இல்லாதவர்கள். ஆனால் அவர்களுக்கும் உள்ள அக்கரையையும், பணம் போட்ட பாத்யதையையும் தீர்ப்பதற்கு கம்பெனியை ஆளும் டைரக்டர்கள், வருஷாந்திரக் கணக்குக்கொடுத்து, பங்குகளுக்கேற்ற டிவிடென்டும் தெரியப்படுத்துகின்றனர். இவ்விதமே பொது ஜனங்களின் உரிமைகளைப் பாதுகாப்பதென்று முதலாளித்வ ஜன நாயகம், ஏழை மக்களை ஏமாற்றி ஜன ஆட்சி நடக்கிறதென்று இராஜ்யத் துறையில் முதலாளித்வ மோசடி நடத்தப்படுகின்றது.

இவ்வித வருஷாந்திர பாலன்ஸ் ஷீட் (Balance Sheet) லாப நஷ்டக் கணக்கைக் கொண்டே நாம் முதலாளித்வத்தின் கொள்ளையை அறியலாகும். இக்கணக்கும் சரியானதென்று கூற முடியாது. ஆயினும் கூடிய மட்டும் கம்பெனியின் ஸ்திதியை அதினின்று தெரிந்து கொள்ளக் கூடும். இக்கணக்கைப் பங்காளிக்குக் கொடுக்கும் பொழுது கம்பெனி சேர்மெனும், டைரக்டர்களும், வருடாந்திரப் போக்கைப் பற்றி ஒரு ரிபோர்ட்டு செய்வார்கள்.

கல்கத்தா எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனியின் வருஷாந்திரக் கூட்டமும் சென்ற மாதம் லண்டனில் நடந்தது. கல்கத்தாவில் மேற்படி எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனியாரின் தொழிலாளிகள் சில மாதங்களுக்கு முன்னர் ஸ்ட்ரைக் செய்ய உத்தேசித்திருந்தனர். அந்த நெருக்கடி ஒருவாறு நிவர்த்தியாயிற்று. சென்ற வாரத்தில் கம்பெனியாரும் தொழிலாளிகளின் முறைகளிற் சிலவற்றைத் தீர்க்கத் தீர்மானித்திருப்பதாகத் தெரியப்படுத்தப் பட்டிருக்கின்றது.

### லாபக் கணக்கு

கல்கத்தா எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனியின் முதல் £ 2,374,735 அல்லது சுமார் 3 கோடியே 12 லக்ஷம் ரூபாய். கம்பெனியின் பங்குகள் தற்சமயம் ஒன்றிற்கிரண்டாக மதிக்கப்பட்டு, 1 பவுன் பங்கு, 2 பவுன் வரையில் கொடுத்து வாங்கப்படுகின்றன. இக்கம்பெனியின் சேர்மென், டையார்க்கி (Dyarchy) அரசாக்ஷிக்கு, பண விஷயங்களைப்பற்றி ஏற்பாடுகள் செய்து, அதற்குப் பரிசாக கவர்னர் பதவி பெற்றவருமான மேஸ்டன் பிரபு. இந்திய கவர்ன்மெண்டில் உயர்ந்த பதவி வகித்த பல உத்தியோகஸ்தர்கள் இவ்வித விசேஷஸ்தானத்தை யடைகின்றனர். உதாரணமாக சமீபத்தில் வங்காள கவர்னர் பதவியினின்று ரிட்டையர்செய்த ஸர்ஜான் ஆன்டேர்ஸன், இங்கிலாந்தில் மூன்று பெரிய பாங்கிகளில் டைரக்டர். முதலாளித்வத்துக்கும், இராஜிய பரிபாலனத்துக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்திற்கு இது ஒரு அத்தாக்ஷியாகும்.

கல்கத்தா கம்பெனியின் மின்சார சக்தி விற்பனை 1937ம் வருஷத்தில் 100க்கு 10 வீதம் அதிகரித்திருக்கின்றது. முதலும் £400,000 அதிகரிக்கப்பட்டிருக்கின்றது. அதிகரிக்கப்பட்ட முதலின் மீது டிவிடென்ட் 100க்குப் பத்து வீதம் கொடுக்கப் போகின்றனர். இது 1936ம் வருஷத்திய டிவிடெண்டைவிட 2 பங்கு குறைவாகும். இதற்குக் காரணம், "முதல் அழிவு ஈடு" அல்லது 'டிப்ரீஷியேஷனுக்கு (Depreciation) அதிகப்பணம் வைப்பதும், கம்பெனியின் மனேஜ்மண்டுச் சிலவு அதிகமும் எனக் கூறுகின்றனர். தவிர கம்பெனியின் சார்ஜ் விகிதங்களும் சில விஷயங்களில் குறைக்கப் பட்டிருக்கின்றன. 1937ம் வருஷத்திய லாபம் £230,876, அல்லது சுமார் 31 லக்ஷம் ரூபாய். விகிதக்குறைவு செய்தும் பிரிட்டிஷ் முதலுக்கு 31 லக்ஷரூபாய் லாபம்! கான்பூர் தொழிலாளர்கள் 40,000 பேர்களனைவருக்கும் விசாரணைக் கமிட்டியார் கூறிய நலங்களை $1\frac{1}{2}$ மடங்கு செய்தால் இத்தனை ரூபாய் செலவாகும்.

### மேஸ்டன் பிரபுவும் தொழிலாளர் இயக்கமும்.

ஆனால் மேற்படி பங்காளிகள் கூட்டத்தில் மேஸ்டன் பிரபு பிரசங்கத்தின் விசேஷம் வேறு. அவர் தொழிலாளர் குறைகளைப் பற்றிப்பேசியதும், கல்கத்தா கார்ப்பரேஷன் தனது எல்லையுள் எலெக்ட்ரிக் சப்ளை எடுத்துக்கொள்ள முயற்சி செய்ததைப் பற்றியும் பேசியதே.

### முதலாவதாக தொழிலாளர்கள் இயக்கம்

தமது கம்பெனியின் சுபிக்ஷத்தையும், ஒழுங்கையும் தொலைத்து விடும் போலிருக்கின்றதெனப் பீடிகை போட்டுக் கொண்டார். தொழிலாளர்கள் கேட்ட வசதிகளில் பெரும்பான்மையானவை அநியாயமானவையாம். மேலும், "நன்கு நடத்தப் பட்டுவரும் தொழிலாளிகள், வெளி ஏஜண்டுகளால் தூண்டப்படும் பழம் கதை" எனத் தொழிலாளர்களின் இயக்கத்தைச்சொல்லி விட்டார். இதற்கு சாக்ஷியங்களென்ன? பெருங் கூட்டங்கள் நடந்தனவாம். சிவப்புக் கொடியுடன் ஊர்வலங்கள் நடந்தனவாம். நீண்ட குறைகள் கூறப்பட்டனவாம். அடிக்கடி ஸ்ட்ரைக் செய்வோமென்ற பயமுறுத்தல் இருந்தனவாம். தொழிலாளர் இயக்கத்தை எவ்விதமேனும் தொலைப்பது முதலாளிகள் முதல் நோக்கம். தொழிலாளர் இயக்கத்தை அபிவிருத்தி செய்து, அதை நன்கு பயிற்சி செய்து, அபிவிருத்தி செய்பவரைத் தொலைக்க வழி தேடுகின்றார்கள். தொழிலாளிகள் கூட்டங் கூடக் கூடாது; குறைகளைக் கூறக்கூடாது; ஊர்வலங்கள் செய்தாலும் சிவப்புப் கொடி யிருந்து விட்டால் போதும்!! பிரிட்டிஷ் முதலாளிகள் எவ்வாறு யூனியன் ஜாக் (Union Jack) கைக் கொண்டாடுகிறார்களோ, இந்திய மக்கள் எவ்வாறு காங்கிரஸ் கொடியை ஆதரிக்கின்றனரோ, அவ்வாறே தொழிலாளர்கள் தங்கள் சுயேச்சைக் கொடியாகிய சிவப்புக் கொடியை ஆதரிப்பார்கள். தொழிலாளர் இயக்கம் உண்மையில் அங்கு ஏமாற்றப் படமாட்டாத வழியில் விருத்தி யடைகின்றது. எங்கு முன்னேற்ற மடைகின்றதோ, அவ்விடங்களில் முதலாளிகள் அதை எதிர்ப்பார்கள். எதிர்ப்பதற்கு இல்லாத செல்லாக் காரணங்கள் கூறி, உண்மைத் தொழிலாளர் இயக்கத்தொண்டர்களை, வெளி ஏஜண்டுகள் எனக் கூறி, சட்ட ஆதரவு பெற்று, முறியடிக்க முயலுவார்கள். அதிகார வர்க்கத்திலிருந்த மேஸ்டன் பிரபுவுக்கு இதுவே முக்கியவிஷயமாகத் தோன்றுவதும் அதிசியமில்லை

### போதுஜன சாதனங்கள்— காங்கிரஸ் மந்திரிசபைகளின் கடமை

இரண்டாவதாகக் கல்கத்தா கார்ப்பரேஷன் கம்பெனியாருக்கு நோட்டீஸ் கொடுத்தனர். தாங்கள் தங்களது எல்லையுள் தாமே எலெக்ட்ரிக் சப்ளை செய்யப் போவதாகக் கூறினர். மெஸ்டன் பிரபு நீதி நிபுணர்களைக் கலந்து, அந்த நோட்டீஸ் நீதிஸ்தலத்தில் நிலை நிறுத்தப்பட முடியாதென்று அறிந்து, தம்மைப் பாதிக்காதென்று சொல்லி விட்டார். வங்காள மாகாணக் கவர்ன்மெண்டாரின் உத்திரவு கேட்டார்கள் கல்கத்தா கார்ப்பரேஷன் கவுன்சிலர்கள். உடனே ஓடி வந்தார் கம்பெனியின் காரிய தரிசியும், மானேஜரும் கல்கத்தா

(15ம் பக்கம் பார்க்க)

# காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சி செய்திகள்

## திருச்சி

16-5-38உ 6-30 மணிக்கு டவுன் ஹால் மைதானத்தில் ஜில்லாப் பொதுக் காரியதரிசி எல். கே. அப்புலிங்கம் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தொடக்கத்தில் தோழர்கள் கிருபாபுரி, என். சுராம்பசிவம், மணக்கால் ராஜா, முதலியோர் சோஷியலிஸ்ட் கீதங்கள் பாடியபின் தோழர் ப.ஜீவானந்தம் “காங்கிரஸும் சோஷியலிஸ்டுகளும்” என்பது பற்றி நீண்டதோர் பிரசங்கம் செய்தார். இரவு 8-30 மணிக்கு வந்தனங் கூறப்பெற்று கூட்டங் கலைவுற்றது.

* * *

## மதுரை

கா. சோ. கட்சியின் ஆதரவில் ஜான்ஸிராணி பார்க் (மேலகாட் பொட்டல் மைதானத்தில்) தோழர்கள் ப. வ. சோம சுந்தர நாடார், ஸ்ரீனிவாஸ ஆழ்வார் இவர்களின் மரண அனுதாபக் கூட்டம் நடைபெற்றது. தோழர் ரெ. பொன்னுசாமி செட்டியார் தலைமை வகித்தார். தோழர் ப. ஜீவானந்தம் (த. கா. சோ. க. பொதுக் காரியதரிசி) ஷியார்களின் குணதிசயங்களை எடுத்துரைத்த பின் அவர்கள் ஆத்மா சாந்தியடைய வேண்டுமானல் நீங்கள் எல்லோரும் அவர்களைப் போல் புரட்சி மனம்பான்மையுடன் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அடியுடன் தொலையும் வரை பாடுபட வேண்டுமென்றும், மதுரை நகரில் உள்ள காங்கிரஸ் தலைவர்கள் ‘புரட்சிஓங்குக’ ‘ஏகாதிபத்தியம் ஒழிக’ என்று சொல்லக்கூடாது என்று சொல்லுவதைப் பார்த்தால் விநோதமாயிருக்கிறது என்றும், தேசத்தின் பூர்ண விடுதலைக்குப் பாடுபடுவர்கள் அம்மாதிரி சொல்லக்கூடாதென்றும், பண்டித ஜவஹர்லால் நேரு, ராஷ்டிரபதி போஸ், முதலியவர்கள் சொல்லும் அதே சபையில் இருக்கும் இவர்கள் ஏன் இம்மாதிரி சொல்லுகிறார்கள் என்று தெரியவில்லையென்றும் கூறினர். மேலும் நாம் ரஷியா தேசத்தைப் போல் விடுதலையடைய வேண்டுமென்றும் மிக விளக்கியதுடன் நாட்டிற்கு பாடுபட்ட லட்சுமி பாய், ஜான்ஸிராணி, பஞ்சாப் படுகொலை முதலிய சரித்திரங்களை விளக்கி காட்டியதுடன், புரட்சி மனப்பான்மையுடன் நாம் வேலை செய்தால் சீக்கிரம் விடுதலை யடைவோம் என்றும், மிக விளக்கமாகப் பேசினர். பின்னர் ஐ டி.எப். சுந்தரராஜன் டி. எல். சசிவர்ணம், ஆர். கே. சாந்துலால், ஆர். கே. ராஜகோபாலன், கே.எ. முத்துசாமி, நித்தியானந்தம், முதலியோர் பேசிய பின் கீழ்கண்ட தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது. தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் கலைந்தது.

### தீர்மானம்

தோழர்கள் ப. வ. சோமசுந்தரம், ஸ்ரீனிவாஸ ஆழ்வார் ஆகியவர்கள் மரணமடைந்ததற்கு இக்கூட்டம் வருந்துவதுடன் ஷிகண்டதேசபக்தர்களின் மரணத்தை ஈடு செய்ய அனைவரும் ஏகாதிபத்திய எதிர்ப்புச் சபையான இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையில் அங்கத்தினர்களாக சேர்ந்து சுதந்திரப் போராட்டத்தை வலுப்படுத்த வேண்டுமென மகாஜனங்களைக் கேட்டுக்கொள்கிறது.

* * *

## கோவை ஜில்லா வாலிபர், தொழிலாளர், சோஷியலிஸ்டுக்கட்சி மகாநாடுகள்

### ஜூன் மாதத்தில் நடத்த முடிவு

மேற்கண்ட மூன்று மகாநாடுகளின் அமைப்பாளர் கூட்டம் கோவைக்கடுத்த பாப்பநாயக்கன்பாளையத்தில் தோழர் கே. கோவிந்தராஜு அவர்கள் இல்லத்தில் தோழர் ஆர். கிஸன் அவர்கள் தலைமையில் கூடியது. இம்மூன்று மகா நாடுகளையும் ஜூன் மாதத்தில் நடத்த முடிவு செய்யப்பட்டது. மகாநாட்டு அலுவல்களைக் கவனிக்க கீழ்கண்ட கமிட்டியொன்று தேர்ந்தெடுக்கப்பட்டது:

தலைவர் ஆர். தாமோதரசாமி, உபதலைவர் டி. எஸ். ஆறுமுகம், பொதுக் காரியதரிசி எம். நாச்சிமுத்து, கூட்டுக் காரியதரிசிகள் ஆர். கிஸன், கே. ரமணி, எம். ஆர். ராம்தாஸ், பொக்கிஷதார் கே. வேணுகோபால், கமிட்டியங்கத்தினர்கள் எம். சீதாராம், சேது ராமசாமி, பால தண்டாயுதம், எ.ஆர். முத்துசாமி, கருப்புசாமி, டாக்டர் எம். கிருஷ்ணசாமி எல். எம். பி., எஸ். எம். ராமையா, எ. பொன்னுசாமி, கே. கோவிந்தராஜு, எ. நாராயணசாமி, பி. ரங்கசாமி.

கமிட்டிக்கு இம் மகாநாடுகள் வெற்றிபெற நடைபெறுவதற்குரிய சகல ஏற்பாடுகளைக் கவனிக்கவும், உசிதமான தோழர்களைச் சேர்த்துக் கொள்ளவும் அதிகாரமளிக்கப்பட்டது. ஒவ்வொரு கமிட்டி யங்கத்தினரும் மகாநாட்டுக்காக வசூல் வேலையில் முனைந்துழைக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது.

அவர்களின் இம்முயற்சியில் ஏகாதிபத்திய எதிர்ப்புணர்ச்சி கொண்ட வாலிபர்களும், தொழிலாளர்களும், சோஷியலிஸ்ட் அபிமானிகளும், பிறரும், சொல்லாலும் பொருளாலும் செயலாலும் உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

மகாநாடுகள் சம்பந்தமான விபரங்களுக்கு ‘பொதுக் காரியதரிசி, கோவை ஜில்லா வாலிபர், தொழிலாளர் சோஷியலிஸ்டுக் கக்ஷி மகாநாடு ஆபீஸ், மால்மில் ரோடு, கோயமுத்தூர்’ என்ற விலாசத்துக் கெழுதவும்.

* * *

## ஸ்ரீ வைகுண்டம்

ஸ்ரீ வைகுண்டம் தாலுகா காங்கிரஸ் சோஷியலிஸ்டு கக்ஷியின் கிளை ஸ்தாபனங்கள் கீழ்க்கண்ட இடங்களில் நிறுவப்பட்டிருக்கிறது. 1. செந்தியம்பலம், 2. சாயர்புரம், 3. ஆத்தூர், 4. குரும்பூர், 5. குருவத்துரை, 6. கொழுவநல்லூர்.

* * *



சீன சோவியத் தலைவர் மா-சீ-தங்

## நமது புதிய ஏஜண்டு

—:o:—

ஸ்ரீ வைகுண்டத்தில் பத்திரிகை நிரூபர் தோழர் எம். எஸ். அருணசலம் அவர்களை 21-5-38 முதல் நம் “ஜன சக்தி”க்கு ஏஜண்டாக நியமித்திருக்கிறோம்.

மானேஜர்,
“ஜன சக்தி”

# கான்பூர் தொழிலாளர் போர்

## விசாரணைக் கமிட்டியின் முடிவுகள்

(சென்றவாரத் தொடர்ச்சி)

— 'மணி' —

### சட்டங்களுக்குட்பட்டு நடத்தல் முதலாளிகள் முறை!

1936ம் வருஷத்தில் "கூலி கொடுக்கும் முறை" மசோதா (Paymant of wages Act) கொண்டு வரப்பட்டது. அதன் முக்கிய நோக்கம் தொழிலாளிகளின் சம்பளத்தில் நொண்டிச் சாக்குகள் கூறி குறைவுகள் செய்வதை நிறுத்துவதே யாகும். தண்டனையாக விதிக்கப்படும் பைன்கள் முதலிய குறைவுகள் சில இடங்களில் நின்று விட்ட பொழுதிலும், இம்மசோதாவின் விதிகளைத் தப்பிக்கும் முறைகளே பல தொழிற்சாலைகளில் அபிவிருத்தி யடைந்திருக்கின்றன வென்று விசாரணைக் கமிட்டியார் கூறுகின்றனர்.

இம்முறைகளுள் விசேஷமானது "கட்டாய லீவ்" அதாவது இம்மசோதா வருவதற்கு சாதாரண பைன் தண்டனை விதிக்கும் விஷயங்களுக்கு இம் மசோதா வந்த பின்னர் தொழிலாளிக்குக் "கட்டாய லீவு" கொடுத்தாய் விடும். அதாவது முதலாளியின் இஷ்டத்திற்குத் தக்கவாறு ஒருவாரமோ பத்து நாளோ சம்பளமில்லாமல் தாராளமாகக் கட்டாய லீவு கொடுத்து விட்டாய்விடும். இம் முறையை விசாரணைக் கமிட்டியார் கண்டனம் செய்திருக்கின்றனர்.

மேலும் ஒரு தொழிற்சாலையின் பலபாகங்கள் ஒன்றிற்கொன்றிணங்கியதாகும். ஒரு பாகத்தின் வேலை சாதாரணமாக மற்ற பாகங்களுக்கு இணங்கியவாறு நடக்காது குறைந்துவிடின், அடுத்த பாகத்து வேலைக்காரர்கட்குச் சரிவர வேலையமராது. அதற்காக அப்பாகத்தவர்களில் சில்லரைச் சில நாட்களுக்கு வேலையின்றி நிறுத்திவிடுவார். இதுவும் ஒருவித தண்டனையே யாகும். அம்மாதிரி நிறுத்துவது ஒரு சமயத்தில் இரு தினங்களுக்கு மேற்படாதிருக்க வேண்டு மென்று விசாரணைக் கமிட்டியார் கூறியிருக்கின்றனர்.

இது தவிர வேலையில் முதல் தரம், நடுத்தரம், கடைத்தரம் எனப்பிரிக்கப் பட்டு, ஒவ்வொரு தரத்து வேலைக்கும் ஒரு விகிதக் கூலி ஏற்படுத்தித்தொழிலாளிகள் கூலியானது கூலிகொடுக்கும் வரை நிச்சயப்படாது நிற்கின்றது. இந்த அபிபாயம்,பம்பாய் மாகாணத்து பாக்டெரி இன்ஸ்பெக்டரால் (27-11-37) சட்ட விரோதமான பழக்கமெனக்கூறப்பட்டிருக்கிறது.

### தொழிலாளர் இயக்க ஜுரத்துக்கு மருந்து-சீட்டுக்கிழிவு

தொழிலாளர் போரில் எவ்விடத்திலும் முக்கியமான சண்டை செய்யப்படும் விஷயம் வேலையினின்று 'டிஸ்மிஸ்' செய்யும் காரணங்களே யாகும். எவ்விடத்திலும் தொழிலாளர் இயக்கம் பிறந்து நிலை பெறும் சமயத்திலும் முதலாளிகள் இயக்கத்தில் உண்மையாக வேலை செய்யும் தொழிலாளிகளை சீட்டுக் கிழித்தல் சகஜமே. கான்பூரில் நடந்த பலவேலை நிறுத்தங்களுக்குக் காரணம் தொழிற்சாலை கமிட்டிகள் என்று முன்னமேயே கூறியிருக்கின்றோம். இந்த மில் கமிட்டியாரின் அங்கத்தினர்களே முக்கியமாக முதலாளிகளால் சீட்டுக் கிழிக்கப்பட்டனர். இவ் விஷயத்தைப்பற்றி விசாரணைக் கமிட்டியார் ஒருவித முடிவுக்கும் வரவில்லை. ஆயினும் தொழில் சச்சரவுகளை கவனித்துப் பார்த்தால், அவைகளில் பெரும்பான்மைக்கு முக்கிய காரணம் இப்பலிகளாலும் காவுகளாலும் ஏற்படும் மனவருத்தமே" என்று கூறியிருக்கின்றனர். மேலும் தொழிலாளி தனது தொழிற் சங்கத்தின் மூலம் தனது வழக்கை தொழிற்சாலையுடன் எடுத்துக்கொள்ள உரிமை வேண்டும் என்று எழுதியிருக்கின்றனர்.

இவ்வழக்கைத் தீர்ப்பு செய்ய "கான்ஸிலியேஷன் ஆபிஸர்" அல்லது "சமாதான ஆபீசர்" எனும் ஒரு உத்யோகஸ்தர் வேண்டும் என்றும், இவ் வுத்யோகஸ்தர் தனது விசாரணையில் தொழிலாளி தவறுதலாகவும், அநியாயமாகவும் வேலையினின்று நிறுத்தப்பட்டானென்று தீர்ப்பு செய்தும், அவனை மறுபடி முதலாளி எடுத்துக்கொள்ளாவிடில் ஒவ்வொரு வருஷத்திய ஸர்விஸுக்கும் 15 நாள் சம்பளமாக நஷ்ட ஈடு தீர்ப்பு கொடுக்க சக்தி வேண்டும் எனக் கூறியிருக்கின்றனர். வேலையினின்று விலக்கப்படும் பழக்கத்தில் பல அநியாயங்கள் இருப்பது தெரிகின்றது. ஆனால் அவைகளை நிறுத்த விசாரணைக் கமிட்டியார் கூறும் முறைகள்போதுமா? போதாது. ஆயினும் கமிட்டியாரே சில மாதங்களுக்கு முன்னர் கான்பூர் தொழிற்சாலைகளில் சீட்டுக் கிழித்தல் குறைவாகவே இருந்ததென்று கூறுவதால், கான்பூர் தொழிலாளர் இயக்கம் செழித்தோங்கும்பொழுது முதலாளிகள் அதை எவ்விதம் நோக்கி, எதிர்த்து முறியடிக்க முயன்றனரென்பது தெளிவு படுமென நம்புகின்றோம்.

### சம்பளத்துடன் லீவு

விடுமுறை அல்லது லீவு விஷயத்தில் — சம்பளத்துடனுள்ள லீவு விஷயத்தில்—கான்பூர் தொழிலாளிகள் மற்றைய இந்தியத் தொழிலாளிகள் பலர்போல் தான் இருக்கின்றனர். லீவு வேண்டுமென்றால் சம்பளமில்லாமல்தான் லீவு பெறக்கூடும். அதற்குக்கூட 'மேஸ்திரி'கள் தயவுவேண்டும்.

ஞாயிற்றுக்கிழமை லீவும் மற்றைய விசேஷ தின விடுமுறைகளும் மட்டும் ஒரு மனிதனுக்குப் போதாது. மற்றைய விஷயங்களுக்கென்றும், உடம்பு அசௌகர்யத்துக்கென்றும் சம்பளத்துடன் லீவு அவசியமெனத் தீர்மானித்திருக்கின்றனர் கமிட்டியார். ஆனால் வருஷத்தில் 15 நாட்கள் லீவு இரண்டு தொடர் வருஷம் வேலை செய்தவர்களுக்கே கொடுக்கலாகும் என்றும், அவர்கள்மேல் கூறியது தவிர 15 நாட்கள் அரைச்சம்பளத்துடன் "நோய்"க்காக லீவு பெறலாம் என்றும் சொல்லி யிருக்கின்றனர். பீஸ் வேலை அல்லது கண்டிராக்ட் வேலை செய்பவர்களுக்கு லீவுக்கு முன் மூன்று மாதங்களின் சராசரி விகிதத்தை எடுத்துக்கொள்வதுதான் நியாயம் என்று சொல்லி யிருக்கின்றனர்.

### சில்லரை வசதிகள்

பொதுவாக தொழிற்சாலையிலுள்ள சௌகர்யங்களைப் பற்றிக் கூறுகையில், தண்ணீர் கொடுக்கும் முறையையும், களைப்பாற வசதிகளையும், சாப்பாடு எடுத்துக்கொள்வதற்கு வேண்டிய வேலைகளின் நிச்சயத்தையும், அவற்றை உண்ணும் இடங்களின் அவசியத்தையும் எடுத்துக் கூறியிருக்கின்றனர்.

வருஷத்தில் தொழிற்சாலை வேலை செய்யவேண்டிய நாட்கள் விஷயத்தில் விசாரணைக் கமிட்டியார் தற்போது இருக்கும் 302 நாட்களுக்குக் குறையாமல் இருக்கவேண்டுமென்று சொல்கின்றனர். தொழிற்சாலைகளை பரிசோதனை செய்ய தற்போதிருக்கும் பாக்டெரி உத்யோகஸ்தர்கள் போதாதென்றும் தெரியப்படுத்தியிருக்கின்றனர்.

### தொழிற்சங்கம்—ஏன்? விசாரணைக் கமிட்டியாரின் கொள்கை

பலமுள்ள தொழிற்சங்கம் பலவிதங்களில் இன்றியமையாத ஆதாரம். "திடீரென நடக்கும் வேலை நிறுத்தங்களுக்கும், ஆதாரமற்ற வேலை நிறுத்தங்களுக்கும் மாறான முட்டுக் கட்டை" என்ற கொள்கையின் மீது விசாரணைக்கமிட்டியார் தொழிற்சங்க விஷயத்தை நோக்கியிருக்கின்றனர். இக் கொள்கையே விசாரணைக் கமிட்டியார் மஸ்தூர் சபையைப்பற்றி எடுத்துக்கொள்ளும் அபிப்ராயத்திற்குக் காரணமாம்.

### மஸ்தூர் சபையும் மில் கமிட்டிகளும்

கான்பூரில் உள்ள தொழிற்சங்கம் மஸ்தூர் சபை ஒன்றே. இச்சங்கம் சட்டப்படி ரிஜிஸ்தர் செய்யப் பட்டதாயிருந்த போதும் முதலாளிகள் அச்சங்கத்தை பொது வேலை நிறுத்தத்தினின்று உதித்த சமாதான உடன்படிக்கை வரையில் அங்கீகரிக்கவில்லை. அந்த அங்கீகாரமும் சில நாட்களுக்குள் ரத்து செய்து விட்டனர். அந்த ரத்துக்குக் காரணம் பொதுவேலை நிறுத்தத்தை நடத்திய மஸ்தூர் சபை தொழிலாளர்களின் ஆதரவு பெற்று தொழிலாளர்களின் மொத்த அபிப்ராயங்களை எடுத்துரைக்கும் சங்கமல்ல வென்று முதலாளிகள் கூறி யிருக்கின்றனர். தொழிலாளர்களனைவரும் சரியான ஜனநாயக முறைப்படியாக எல்லா விஷயங்களையும் நன்கறிந்து ஆலோசித்து, விருத்

(18ம் பக்கம் பார்க்க)

இளைஞர் பகுதி

# பி. கிருபாட்கின் இளைஞர்களுக்கு விடுத்த வேண்டுகோள்-2

(சென்ற வாரத் தொடர்ச்சி) * (மோ-ர். எஸ். கிருஷ்ணன்)

ஆனால், ரசாயன சாஸ்திரம் வான சாஸ்திரம், சரீர சாஸ்திரம் முதலியனவற்றில் புத்தியைச் செலுத்தி மேன்மேலும் ஆராய்ச்சி செய்வேன். இது, "இன்றில்லாவிடில், பிற்சந்ததியார்களுக்குப் பலன் கொடுக்கும்." என்று நீ சொல்லலாம்.

நான், இச்சாஸ்திரத்தில் அறிவைச் செலுத்தியதால் நீ அடைவதென்ன? இயற்கையின் ஆராய்ச்சியில், அதில் மனதைச் செலுத்துவதில் ஓரின்பம்—பேரின்பம்! அங்கனமாயின் இவ் வேதாந்திக்கும், கள் சாராய மருந்தி, சிறிது நேரத்திற்காகவாவது கவலைகளை மறந்து ஆத்ம திருப்தியடையும் குடியனுக்கும் என்ன வித்தியாசம்? ஆம். வேதாந்தி சுகத்தை நாட ஓர் நல்ல வழியைத் தேர்ந்தெடுக்கின்றான். அச்சுகம் நெடுநாள் நீடித்திருக்கும். மற்றபடி இருவரும் ஒரே வகுப்பைச் சார்ந்தோர். ஸ்வார்த்தி—தன்னலத் தேட்டத்தினர்.

இல்லை. நீ, மனோ திருப்திக்காக படிக்க விரும்பவில்லை. இச்சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்தலால் மானிடவர்க்கத்திற்கு பேருபகாரம் செய்வதுன தெண்ணம். இதே கருத்துடன் உன் காரியத்தில் செல்கின்றாய். நல்லது சாவதானத்துடன் நாலாபுறமும் சுற்றிப்பார். சாஸ்திரங்கள் (Scince) விலாசப்பிரியர்களுக்கு ஓர் அடிமையாய்க் கிடக்கின்றன. மானிட வகுப்பின் ஓர் சிறிய பாகத்தினரின், கை விரல் விட்டு எண்ணக்கூடிய மக்களின் வாழ்க்கையை ஆனந்தப்படுத்தும் கருவிகளாய் உபயோகப்படுத்தப்படுகின்றன. சமூகத்தின் பெரும்பாகம் அதனிடம் அணுகவும் யோக்கியமற்று கிடக்கின்றது.

சுமார் 100 வருடங்களுக்கு முன்னமேயே பிரபஞ்சத்தின் உற்பத்தியும், அதன் படிப்படியான வளர்ச்சியும் கண்டுபிடிக்கப்பட்டது. அதை இன்று எத்தனை பேர்கள் படித்து அறிந்திருக்கின்றனர். எத்தனை பேர்களுக்குக் கற்கும் சாதனங்கள் கிடைத்தன. இன்றும் பல்கோடி மக்கள் புராதன மூடக் கொள்கைகளில் மூழ்கி, காட்டு மனிதர்களின் பழக்க வழக்கங்களை அனுசரிக்கின்றனர்.

நிற்க, மனித வாழ்க்கையைச் சீர்ப்படுத்துவதில் சைன்ஸ் எவ்வளவு தூரம் உதவி அளித்திருக்கின்றது? மக்கள், தேக ஆரோக்கியத்துடன், அதிக உழைப்பற்று, கஷ்டங்களற்று, சுகவாழ்க்கை வாழும் வழிகளை சைன்ஸ் எடுத்துரைக்கின்றது. அதற்கு வேண்டிய சாதனங்களும் நம் முன்னேயிருக்கின்றன. ஆனால் மக்களின நிலைமையோ சொல்லத்தரமன்று. தினந்தோறும் 12, 13 மணி நேர வேலை செய்தும், இருக்க இடம், உடுக்க உடை, உண்ண உணவற்று மடிகின்றனர். சைன்ஸ், இன்று, சமூகத்தின் குறிப்பிட்ட சில 'பாக்ய சாலிகளின்' நன்மையின் பொருட்டு உபயோகிக்கப்படுகின்றது. ஏன்?

ஏனெனில் நாம் வசிக்கும் சமூகம் இரண்டு வகுப்புகளாக பிரிக்கப்பட்டிருன்றது. ஓர்புறம் பெரும் பான்மையான மக்கள். மற்றோர்புறம் கை விரல் விட்டெண்ணக் கூடிய ஓர் சின்னஞ்சிறு கூட்டத்தினர். ஒரு பக்கம் கூலி வேலை செய்யும் 'அடிமைகள்,' மற்ற பக்கம் அவர்களை நாகரிக முறையில் கொள்ளை யடிக்கும் முதலாளிகள். இப்பேதத்தின் காரணமாய் சமூகத்தில் 100க்கு 90 பேர் சைன்ஸின் லாபத்தை அனுபவிக்க முடியாது தவிக்கின்றனர்.

இங்ஙனம் பல உதாரணங்கள் கூற முடியும். ஆனால் இச் சமூகத்தில் வசிக்கும் நீ அறியாத விஷயம் ஒன்றுமில்லை. நிதானத்துடன், திறந்த உள்ளத்துடன் நாலாபுறமும் நோக்கினால் எல்லாவற்றையும் நன்கு உணரலாம். ஆகவே இத்துடன் நிறுத்திக்கொண்டு மேலே செல்வோம்.

நண்ப, இன்று சாஸ்திரங்களின் ஆராய்ச்சியை மேன்மேலும் நடத்திச் செல்ல அவசியமில்லை. நாம் இதுவரை கண்டு பிடித்த உண்மைகளை, சமூகத்தின், அதில் வசிக்கும் அனைவரின் நன்மையின் பொருட்டு உபயோகப்படுத்தலே முதற்கடமை. சைன்ஸை விலாசப்பிரியர்களின் கைகளினின்று விடுவித்து மக்களனைவரின் நன்மையின் பொருட்டு உபயோகப்படுத்தல் வேண்டும். இதுவே நியாயம் இன்று வேண்டுவது. இதிலேயே சைன்ஸின் வளர்ச்சியுமிருக்கின்றது. சைன்ஸ் முன்னேற வேண்டுமெனில் உடனுக்குடன் ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளை மக்களிடையே பரப்ப வேண்டும். அதன் உபயோகங்களை எடுத்துரைக்க வேண்டும். அவ்விஷயத்தில் இன்னும் அதிகம் கவனம் செலுத்தி அதன் முன்னேற்றத்திற்கு ஆதரவளிப்பான் வேண்டிய நிலைமையைத் தயார் செய்தல் வேண்டும். அப்பொழுது தான் சைன்ஸ் வளர முடியும். சைன்ட்டிஸ்ட்ஸ், வேதாந்திகள், மற்றைய கவிஞர், கலைஞர்களைப் போல் சமூகத்தின் விளைவேயாகும்.

இவ்வுண்மையை, நீ என்று உணருகின்றாயோ அன்றே சோஷியலிஸம் என்ன என்பதையும் அறிவாய். ஓர் சிறு கூட்டத்தினரின் ஆடம்பர வாழ்க்கைக்காக அல்லும் பகலும் வெறியனைப் போல் ஆராய்ச்சி செய்யும் எண்ணத்தை ஒழித்து, நீ கண்ட உண்மைகளை அல்லலுறும் மக்களின் முன்னேற்றத்தின் பொருட்டு உபயோகிப்பதில் முனைவாய். அதில் நீ கனவிலும் கருதாத ஓர்வித ஊக்கமும் உற்சாகமும் உனக்கு ஏற்படும். பின் ஓர் நாள்—அந்நாள் வெகுதூரத்தில்லை—நாம் இன்று பாடுபடும் சோஷியலிஸ்ட் சமூகம் நிருவப்படும். அதில் மக்கள் லக்ஷக்கணக்காய் சைன்ஸின் முன்னேற்றத்திற்காக ஒன்றுசேர்ந்து உழைக்கமுன்வருவார்கள். இன்று மக்களிடமிருந்து பிரிக்கப்பட்டு, தனிப்பட்ட சிலரின் கைகளில் மிகவும் குறைவான வேகத்துடன் வளரும் சைன்ஸ் அன்றையதினம் மக்களின் ஒன்றுபட்ட முயற்சியால், சமூகத்தின் கையில், சமுதாயத்தின் நன்மையின் பொருட்டு சொல்லொணா வேகத்துடன் ஓங்கி வளரும். அன்றே, நீ சைன்ஸின் உண்மை ஆனந்தத்தை அடைவாய். அவ் ஆனந்தம் சமூகத்தில் அனைவராலும் பங்கிடப்படும்.

* * *

நண்ப, நீ டாக்டராக விரும்பவில்லை. சைன்ட்டிஸ்ட் ஆவதாயும் நோக்கமில்லை. பாரிஸ்டர் தொழிலுக்காகப் படித்து வெளிவந்திருக்கின்றாய். நற்குணமுடையவன். பரோபகார சிந்தை கொண்டோன். "உலகலத்திலேற்படும் அநீதிகளை எதிர்த்துப் போராடி நியாயத்தை நிலைநிறுத்தும் மாபெரும் காரியத்தில் எனது வாழ்க்கையைச் செலவழிப்பேன்" என்று ஒருவேளை நீ சொல்லலாம். இதைவிடச் சிறந்த கைங்கர்யம் வேறு என்ன உலகில் இருக்க முடியும்? இதில் உனக்கு மிகவும் உற்சாகம். முழு நம்பிக்கையுடன் தொழிலை ஆரம்பிக்கின்றாய். மிகவும் நல்லது. முதலில் ஓர் சிறிது சட்ட நடவடிக்கைகளைப் புரட்டிப் பார்ப்போம்.

கொழுத்த பணக்கார ஓர் ஜமீன்தார், தனது கிஸ்தி பாக்கியின் பொருட்டு ரயத்தை நிலத்தைக் காலி செய்யும்படி வேண்டி நிற்கின்றான். சட்டத்தின்படி பார்த்தால் இதில் தர்க்கத்திற் கிடமேயில்லை. கிஸ்தி செலுத்தாவிடில் ஜமீனை விட்டு விட வேண்டியதுதான். ஆனால் சிறிது விசாரணைசெய்து பார்க்குமளவில் கீழ்க்கண்ட உண்மை விளங்கும்: ஜமீன்தார் கிஸ்தி பணத்தை வசூலித்து களியிலும் வெறியாட்டிலும், கோலாகாலத்திலும் இறைக்கின்றான். மற்றோர்புறம் ரயத் அனுதினமும், இரவும், பகலும், வெயிலிலும், மழையிலும், பனியிலும் நிலத்தில் உழைக்கின்றான். இவ்வுழைப்பின் காரணமாயும், பக்கத்தே ரயில், ரோடு முதலியன ஏற்பட்டதின் காரணமாயும், சுமார் 50 வருட காலங்களில் நிலத்தின் விலை பன்மடங்கு உயர்ந்துவிட்டது. பாழாய்க் கிடந்த நிலம் பயிரிடப் படுகின்றது. இது ரயத்தின் உழைப்பின் பயன். ஆனால் அவன் நிலைமையோ சொல்லத்தரமன்று. இவ் ஐம்பது வருட காலத்திற்குப் பின் அவன் கைமேற்கண்ட பலன், தாங்க முடியா கிஸ்திப் பணமும், அதன் காரணமாய் ஏற்பட்ட சகிக்கொணாக் கடன் பாரமுமாகும். ரயத், ஜமீன்தாரின் பொக்கிஷத்தை நிரப்பி

(12-ம் பக்கம் பார்க்க)

# சோவியத் ரஷியாவில்

### நான் கண்ட தொழிலாளர் சங்கம்

பல வாரங்களுக்கு முன்பு லெனின் கிராடு துறைமுகத்துக்குச் சென்றிருந்தபோது, அங்கே இருந்த கடல் தொழிலாளர் சங்கத்தைப் போய்ப்பார்த்தேன். சங்கத்தின் அகன்ற அறைகளைக் கொண்ட வாசிப்புச் சாலை மனதுக்குக் குளிர்ச்சியை உண்டு பண்ணினது. அதனுள் கால் வைத்ததும் என் கண்களை முதன் முதலில் கவர்ந்தது பீத்தோவன் என்ற இசைஞானியின் படமேயாகும். அறையின் வெளிப்பக்கத்தில் மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின், ஸ்டாலின் முதலிய தலைவர்கள் படங்கள் மாட்டப்பட்டிருந்தன. சங்கக் கூட்டங்களுக்கென்று ஒதுக்கப்பட்டு வைத்திருந்த ஒரு சிறு அறையில் வாடோபியனேவ், சக்காலாவ், கிராமாவ் முதலிய "வான வீரர்கள்" படங்கள் அணி செய்து விளங்கின. இந்த "வான வீரர்"களுடைய உழைப்பாலும், தியாகத்தினாலுமே சோவியத்து நாட்டின் ஆகாயப்படை அழியாப்புகழும் அழிக்க முடியாவலுவும் பெற்று நிற்கின்றது. மற்றொரு சுவரின் மீது வெளிநாட்டு சம்பவங்களைக் குறிக்கும் செய்திப் படங்கள் வைக்கப்பட்டிருந்தன. ஸ்பெயின் தேசத்தில் நடக்கும் யுத்தத்தைப் பற்றிய போட்டோக்களும், ஆங்காங்கே தொழிலாள மக்கள் அவ்வப்போது செய்துவரும் ஆர்ப்பாட்டங்கள் ஊர்வலங்கள் முதலியனவற்றை எடுத்துக் காட்டும் செய்திப் படங்களும் காட்சி தந்தன.

லெனின் கிராடிலுள்ள இந்தக் கடல் தொழிலாளர் சங்கத்தின் நூலதிகாரி தன் நூல் நிலையத்தில் அருமையான பல புத்தகங்கள் இருப்பதைப்பற்றி உண்மையாகவே பெருமை பாராட்டிக் கொள்கிறார். அந்நூல் நிலையம், கைத்தொழில், அரசியல், இலக்கியம் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டு விளங்கியது.

லெனின் கிராடு துறைமுகத்துக்குக் கப்பல்கள் வந்ததும், கப்பல் தொழிலாளிகள் நேராக தங்கள் சங்கத்துக்குச் செல்கிறார்கள். ஒவ்வொரு கப்பலிலும் ஒரு நூலதிகாரி இருக்கிறார். இவர் திறமை வாய்ந்த ஒரு கப்பல் தொழிலாளியாகவோ, அல்லது கப்பலின் உணவு அதிகாரியாகவோ, அல்லது பரிசாரகனாகவோ இருக்கலாம். கப்பல் மறுபடியும் புறப்படும்போது, அவர்கள் கடல் தொழிலாளர் சங்கத்திலிருந்து ஒரு சுமைப் புத்தகங்களை எடுத்து வருகின்றனர். இவற்றைத் தங்கள் மேற்பார்வையிலிருக்கும் கப்பலின் 'செம்பகுதி" (Redcorner) யில் வைத்து கப்பலின் நூல் வளத்தைப் பெருக்குகிறார்கள்.

இந்தவிதமான கலைப்பயிற்சி ஆயிரக்கணக்கான ஆலைகளிலும், கூட்டுறவுப் பண்ணைகளிலும், சம்மட்டியும் அரிவாளும் பொறியத் திகழும் செங்கொடி பறக்கும் நூற்றுக் கணக்கான கப்பல்களிலும் மாற்றமின்றி நடந்தேறி வருகின்றது.

சோவியத் ஐக்கிய நாடெங்கணுமாக பல்லாயிரக் கலைக்கழகங்கள் பரந்து கிடக்கின்றன. இவையெல்லாம் கலைகளையே தொழிலாகக் கொண்டவர் கழகங்களன்று. அவை கலை விருப்பத்திற்காகப் பயிலும். அமைச்சூர்களைக் கொண்டவைகளே. இவற்றுள் ஒன்று லெனின் கிராடு கடல் தொழிலாளர் சங்கத்திலும் அமைக்கப்பட்டிருக்கிறது. அந்தக் கலைக்கழகத்துக்குத் தனக்கே சொந்தமான ஒரு காட்சிசாலை இருக்கிறது. அதில் சுமார் 1000 பேர் உட்கார்ந்து பார்க்கப் போதிய இடமுண்டு. சங்க அங்கத்தினரே அதில் சில வேளை நடிக்கிறார்கள். மற்ற வேளைகளில் லெனின் கிராடிலுள்ள மிகப் புகழ்பெற்ற நடிகர்களெல்லாம் அங்கு வந்து நடிக்கிறார்கள். இந்த அரங்கிலேயே சோவியத் நாட்டில் தயாரிக்கப்படும் புத்தம் புதுத் திரைப்படங்களெல்லாம் காட்டப்படுகின்றன. உதாரணமாக, கடல் தொழிலாள மக்கள் வாழ்க்கையையே சித்திரித்துக் காட்டும் "கிராண்ஸ்டாட்டிலிருக்கும் நாம்" என்ற மகத்தான படம் இங்கே காட்டப்பட்டது.

சங்கத்தின் மற்றொரு பகுதி, "பாமரர் இலாகா" எனப்படும். அது ஒரு பெண்மணியின் மேற்பார்வையில் நடந்துகொண்டிருந்தது. கடல் தொழிலாளர் காட்சி அரங்குகள், இசை அரங்குகள், பொழில்கள், பொருட்காட்சிச் சாலைகள் முதலிய இடங்களுக்குப் போவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்துகொடுப்பது அந்த அம்மையார் வேலை. லெனின்கிராடில் ரெப்பின் என்ற புகழ்பெற்ற பெரும் ஓவியப் புலவனின் படங்கள் பொருட்காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. ஒரு மாதத்துக்குள் இரண்டாயிரம் கப்பல் தொழிலாளர்கள் அவற்றைக் கண்டு மகிழ்ந்துவந்தனர் என்று அந்தப் பெண்ணதிகாரி என்னிடம் கூறினர். சோவியத் ஐக்கிய நாடு முழுதுமே இம்மாதிரியான இன்கலை வாழ்க்கை ஓங்குகிறது. மாஸ்கோவிலே புஷ்கின் கலைப்பொருட்காட்சி மண்டபத்தின் முன்னே ரொம்பிரான்று என்ற ஓவியப் புலவனின் கைவேலைகள் காட்சியில் வைக்கப்பட்டிருந்தபொழுது ஒவ்வொரு நாளும் எத்தனையோ மக்கள் அணி அணியாக உட் செல்வதற்குக் காத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். இப்படியாக மாதக் கணக்காக திரள் வந்துகொண்டே இருந்தது. ரஷிய ஓவியப் புலவர்களான வி. ஐ. சுரிகாவ், ஐ. என். கிராம்ஸ் காய் என்பவர்களுடைய படங்கள் மாஸ்கோவிலிருக்கும் டிரட்யகாவ் என்னும் பொருட்காட்சி சாலையில் வைக்கப்பட்டபோது, ஒரு சில மாதங்களில் 6,80,000 மக்கள் வந்து கண்டு மகிழ்ந்து போயினர்.

### சுவரிலே பத்திரிகை

சோவியத் ரஷியாவிலுள்ள ஒவ்வொரு தொழிற் சங்கத்திலும், ஆலையிலும் பள்ளிக்கூடத்திலும், தவறாது காணப்படும் மற்றோர் புதுமை சுவர் பத்திரிகைகளாகும். லெனின் கிராடுக் கடல் தொழிலாளர் சங்கத்திலும் இது நடைபெறுகிறது. சில பெரிய தொழில் நிலையங்களில் இம்மாதிரியான பத்திரிகைகள் டஜன் கணக்காக நடத்தப்படுகின்றன. காகிதப்பத்திரிகை எவ்வளவு கவனத்துடன் தயாரிக்கப்படுகறதோ, அவ்வளவு கவனத்துடன் சுவர்ப் பத்திரிகையும் தயாரிக்கப்படுகிறது. சுவர்ப்பத்திரிகைதான் சோவியத் தொழிலாளிகளுக்கு வெளி உலகத்தைப்பற்றிய சரியான அறிவையூட்டும் கருவி. மக்களுக்கும் சோவியத் வாழ்க்கைக்கும் இருக்கும் நெருங்கிய உறவை அது பளிங்கெனக் காட்டுகிறது. பெரும்பாலும் சுவர்ப் பத்திரிகைகள் டைப் செய்யப்பட்டனவையே. ஆனால் அழகாக டைப் செய்யப்பட்டிருக்கும். அதிலுள்ள சித்திரங்களும், விகடப்படங்களும் அந்தந்த அமைப்பில் நடக்கும் செய்திகளைத் தெளிவாக எடுத்துக் காட்டும். கூட்டுறவுப் பண்ணையாளரின் வெற்றிகளைக் காட்டும் கதைகளிருக்கும்; சோம்பேரிகளின் இழிதன்மையைக் காட்டும் கதைகளிருக்கும்; ஆலை நிர்வாகிகளைப் பற்றிய ஒழுங்கான ஆட்சேபணைகள் வெளிவரும். உற்பத்தியின் அளவையும் குணத்தையும் பெருக்கச் செய்த முயற்சிகளைப் பற்றிய அறிக்கைகள் வெளிவரும்; உற்பத்தி பெருக வொட்டாமல் தடை செய்யும் சதிகாரரின் துரோகச் செய்திகள் வெளியாகும். இன்று சுவர்ப்பத்திரிகைகளைப் படிப்போமானல், வருகிற சோவியத்து ஐக்கிய நாட்டின் பெருஞ் சட்டசபைக்கு நடக்கும் தேர்தல்களைப் பற்றிய விதிகளை, பாசிசத்தின் கங்காணிகளான டிராட்ஸ்கி, புக்காரின் முதலியோர் சூழ்ச்சிகளைப் பற்றிய விஷயங்களையும் நாம் அறிந்து கொள்ளலாம். ரஷிய சோஷியலிஸ்ட் புரட்சியின் இருபதாவது ஆண்டு விழாவை நடத்துவதில் அமைப்புகள் ஒன்றோடொன்று முனைந்து இடு[ம்] சோஷியலிஸ்டு போட்டிச் செய்திகளும் அறைகூவல்களும் வெளியிடப்படுகின்றன.

சுவர்ப் பத்திரிகைகளில் வரும் கட்டுரைகளில் பெரும் பாகமும் தொழிலாளர்களா[ா]லேயே எழுதப்படுகின்றது. ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஒரு கமிட்டி உண்டு. அந்தக் கமிட்டி, கட்டுரைகளில் கூறப்படும் செய்திகள் உண்மை தானா என்று ஆராய்ந்து முடிவு கட்டுகிறது. சோவியத் ரஷியாவிலே சோஷியலிசத்தை நிலைநாட்டும் பெரும் பணியில் சுவர்ப் பத்திரிகை நிலையான பயனை அளித்திருக்கிறது என்பதற்கு எள்ளளவும் சந்தேகமே இல்லை.

(S. ஹ

### பார்க்குமிட மெங்கும் புஸ்தகசாலைகள்

லெனின்கிராடுக் கடல் தொழிலாளர் சங்கத்திலுள்ள தொழிலாளர்கள் ஆயிரக் கணக்கான நூல்களைக் கொண்ட தங்களது நூல் நிலையத்தைப் பெருமிதத்தோடு சுட்டிக் காட்டினார்கள். ஆனால் இதைவிடப்

---

## பிரஞ்சிந்தி
## இரண்டு சே
## வெளியே

பிரஞ்சு இந்திய
கத்தில் சம்பந்தப்
தோழர்கள் வி. ரா
கட்சி நிர்வாகக்
பி. பி. ராமசாமி இ
சர்க்கார் உத்திரவுப்
டிருக்கின்றனர்.

பிரஞ்சிந்தியப்
இருவர்களும் இங்கி
தல்ல' என்று ரிப்பே
கவர்ன்மெண்டார் இ
பித்திருக்கின்றனர்.

தோழர் வி. ரா
லேயும் பிரஞ்சிந்தி
யிருக்கிறார்கள்.

# மக்கள் கலைப் பயிற்சி

பெரிய—லட்சத்துக்குமேல் மிகுதியான—புத்தகங்களைக் கொண்ட ஆலைப் புத்தகசாலைகள் எத்தனையோ இருக்கின்றன. சோவியத்து ரஷ்யா வெங்கணும், ஆயிரக் கணக்கான கிராமங்களில் உலகத்திலுள்ள பல்வேறு மொழிகளிலுமிருக்கும் உயர்ந்த நூல்களைக் கொண்டே நேர்த்தியான புத்தகசாலைகள் காணப்படுகின்றன. சென்ற மூன்று ஆண்டுகளுக்குள்ளே கிராமப் புத்தகாலயங்கள் 19,500-லிருந்து 40,000 மாகப் பெருகியிருக்கின்றன.

சோவியத் நாட்டிலுள்ள ஒவ்வொரு தொழிற்சாலையிலும், ஒவ்வொரு பொதுப் பண்ணையிலும், பெரும்பாலும் ஒரு சங்கம் இருக்கும். இந்தச் சங்கம் கலைப் பயிற்சிக்கு நடுநாயகமாக விளங்கும். அதில் உணவுச் சாலை இருக்கும்; வாசிப்புச்சாலை இருக்கும்; இசை, நாடகம், படம் பிடித்தல் முதலியன கற்பிக்க தனி கலாநிலையங்கள் இருக்கும்.

1913-லே, ஜார் ஆட்சியில் $8\frac{1}{2}$க் கோடி நூல்கள் வெளியாயின. ஆனால் 1936-லோ 57 கோடிக்கு அதிகப்படியான நூல்களை சோவியத் நூற்பதிப்பு நிலையங்கள் வெளியிட்டிருக்கின்றன. இந்தக் கோடிக் கணக்கான நூல்கள் யாவும், தொழிலாளர் கையிலும், கூட்டுறவுப் பண்ணையாளர் கையிலும், செஞ்சேனை வீரர் கையிலும், ஆசிரியர் கையிலும் மாணவர் கையிலுமாக பரந்து கிடக்கின்றன.

பாசிஸ்டுகள் பலர் புத்தகங்களைத் தீக்கிரையாக்குகின்றனர். ஆனால் சோவியத் அரசாங்கமோ அவற்றை பல கோடி மக்கள் படித்துய்யுமாறு பரப்புகிறது. சோவியத் நாட்டின் புத்தக விற்பனையைப் பற்றிய கீழ்வரும் புள்ளி விபரங்களைச் சிந்தித்துப் பாருங்கள்.

| | பிரதிகள் |
|---|---|
| ஷேக்ஸ்பியர் | 3,29,000 |
| கோகோல் | 20,99,000 |
| லெர்மாண்டாவ் | 19,81,000 |
| டால்ஸ்டாய் | 24,91,000 |
| பார்புஸ்ஸே | 9,18,000 |
| மயாகோவ்ஸ்கி | 10,96,000 |
| ஹீன் | 3,38,000 |
| ஷோலாம் அலீஷம் | 7,15,000 |

## எல்லோருக்கும் சினிமா

உள்நாட்டு யுத்தம் முடிந்ததும், நடனக் கலைகளை வளர்ப்பதற்காக சோவியத் அரசாங்கம் பெருந் தொகைகளை ஆண்டாண்டுதோறும் மான்யமாக வழங்கியிருந்தது. மாஸ்கோ கலைமன்றம், போல்[illegible] இசை மன்றம், மலிநடன மன்றம் முதலிய கலைக் களன்களெல்லாம் இன்று உலகோர் ஏத்த ஒளிர்கின்றன. அவர்கள் செயல் திறனெல்லாம் சோவியத் நாட்டிலுள்ள எண்ணற்ற கலா ரசிகர்களால் வியந்து வாழ்த்தப் பட்டு வருகின்றது.

1914லே. ஜார் ஆட்சியில் ரஷிய சாம்ராஜ்யம் முழுவதிலுமே 176 காட்சி அரங்குகள் தான் இருந்தன. இன்று அந்நாளைவிட ஐந்து மடங்கு அதிகக் காட்சி அரங்குகள் விளங்குகின்றன. 1937ம் ஆண்டு தேசீயப் பொருளாதாரத் திட்டப்படி, அரசாங்கத்திலிருந்தே ஒன்பது காட்சி அரங்கங்களும் இசை அரங்கங்களும் கட்டப்படும்.

இது கலையைத் தொழிலாகக் கொண்டவர் பயிலும் அரங்கங்களையே குறிக்கும். இவற்றைத் தவிர, சோவியத் நாட்டிலெங்கும் ஆயிரக்கணக்கான அமெச்சூர் சபைகள் பரந்து கிடக்கின்றன.

“பாமர மக்களைப் பயிற்றுவிக்கத் திரைக்காட்சியினும் சிறந்த கருவி இல்லை” என்று லெனின் பல ஆண்டுகளுக்கு முன் சொல்லியிருக்கிறார். நிராயுதபாணிகளான பெண்களும் குழந்தைகளும் மாட்ரிட் நகரில் வெடிக்குண்டுகளுக்கு இரையாவதை



ஸ்டாலின்

மாஸ்கோ தொழிலாளர் இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கையில், மாட்ரிடிலுள்ள ஜனநாயகப் போர்வீரர் மாஸ்கோவிலிருந்து வந்துள்ள “கிரான்ஸ்டாட்டிலிருந்து நாம்” என்ற படத்தைப்பார்த்து உணர்ச்சியும் உறுதியும் பெறுகிறார்கள். “ஷாவேவ்” என்ற புரட்சிக் காலத்தில் வாழ்ந்த ஒரு புரட்சி வீரனின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் படம் நெஞ்சை அள்ளுந் தன்மையாய் அமைந்திருக்கிறது. “மாக்ஸிமின் இளைஞன்” என்ற படமானது, இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன் தங்கள் முதியோர் ஜார் ஆட்சியோடும் அவர்களுக்குத் துணையாயிருந்த மென்ஷிவிக் கட்சியோடும் நடத்திய கடுமையான வெற்றிப்போர் இத்தகையதென்பதை இன்றைய இளைஞருக்குக் காட்டும் தன்மையாக அமைந்துள்ளது.

மின்ஸ்க் முதல் மஞ்சூரியா வரையிலும ரஷ்ய தேசத்தில் சினிமா அரங்கங்கள் இல்லாத ஒரு சிற்றூரையோ, சிறுபட்டியையோ பார்க்க முடியாது. சமீப காலத்தில், ஆகாய விமானங்களும் சினிமாக் கலையைப் பரப்புவதற்கு உதவி புரிந்திருக்கின்றன. இவைகள் பல சினிமாப் படங்களையும் அவற்றைக் காட்டும் இயந்திரங்களையும் மிகத் தூரத்திலுள்ள விவசாயப் பண்ணைகளுக்கு எடுத்துச் செல்கின்றது.

## உல்லாசக் கலைப் பொழில்கள்

பல பட்டணங்களில் உல்லாசக் கலைப் பொழில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மிகப் பெயர் போனது மாஸ்கோ நகரத்திலிருக்கும் கார்கிக் கலைப் பொழிலே. இங்கே வெட்டவெளியில் “பச்சைகாட்சி அரங்கங்கள்” காணப் படுகின்றன. இவை ஒவ்வொன்றும் சுமார் 25,000 பேர் உட்காரப் போதுமான இடம் கொண்டுள்ளது. விஞ்ஞான உண்மைகளை எல்லோரும் எளிதில் அறியும்படியாகக் கற்பிக்கப்படும் சொற் பொழிவு மண்டபங்கள்; சினிமாக் காட்சி மன்றங்கள்; சர்க்கஸ், ஆகாய விமானங்களிலிருந்து குதிக்கப் பழகும் கோபுரங்கள் முதலியன காணப்படுகின்றன. ஆயிரக்கணக்கான மக்கள் ஒன்று சேர்ந்து நடனஞ் செய்கிறார்கள். ஒவ்வொரு ஆண்டு ஜுன் மாதத்திலும் நடக்கும் விழாவில் லட்சத்துக்குமேலான மாஸ்கோ வாசிகள் கலந்து கொள்கிறார்கள். ஏனைய மேனாட்டு உல்லாசப் பொழில்களில் காணப்படுவது போன்ற அபாசமான நடவடிக்கைகளெல்லாம் சோவியத் ரஷ்யாவில் காணமுடியாது. எனவே அவைகளுக்கு உல்லாசக் கலைப் பொழில்கள் என்று பேர் கொடுத்தது முற்றிலும் பொருத்தமே ஆகும்.

இன்று சோவியத் ரஷியாவில் செழிப்பதுபோல், பொது மக்கள் கலை என்றும் செழித்ததில்லை. கூட்டுறவுப் பண்ணைகளிலுள்ள கிழ் விவசாயிகளும், கருங்கடல் கப்பற்படையிலுள்ள இளம் வீரர்களும் தாங்களே

(18ம் பக்கம் பார்க்க)

ார்க்கர்)

பாவிலிருந்து

ரஷியலிஸ்டுகள்

றப்பட்டனர்

த் தொழிலாளர் இயக்

ட்டு உழைத்துவந்த

னுதன் (த. கா. சோ.

மிட்டி அங்கத்தினர்)

வரையும் பிரஞ்சிந்திய

படி நாடு கடத்தப்பட்

போலீசார் ‘மேற்கண்ட

ருப்பது விரும்பத்தக்க

ார் செய்ததின்பேரில்

ந்த உத்திரவைப் பிறப்

மனுதனை இதற்கு முன்

ய சர்க்கார் வெளியேற்றி

# பி. கிருபாட்கின், இளைஞர்களுக்கு விடுத்த வேண்டுகோள்-2

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

னான். ஐசுவரியத்தைச் சேகரித்தான். தன் நிலைமையைப் பாழ்படுத்திக் கொண்டான். கிஸ்திப் பணத்தையும், கடன் வட்டியையும் செலுத்தப் பணமற்று தவிக்கின்றான். நிலம் பிடுங்கப்படுகின்றது. சட்டம் சொத்தின் பக்கமிருக்கின்றது. அதன்படி ஜமீன்தார் "குற்றமற்றவன்".

அன்ப, இவ்வழக்கை எங்ஙனம் தீர்ப்பாய்? குமரப் பருவ முதல், கிழப்பருவம் வரை நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்து ஜமீன்தாரின் சொத்தைப் பன்மடங்கு அதிகரித்த குடியானவனிடமிருந்து நிலத்தைப் பிடுங்கி, முதுமைக் காலத்தில் தனது குடும்பத்துடன் பட்டினி கிடந்திறக்க விரட்டுவாயா? — இதுவே நீ பல வருடம் கற்ற சட்டங்கள் உரைக்கின்றன. அல்லது குடியானவனின் ஐம்பது வருட உழைப்பால் சேகரிக்கப்பட்ட ஐசுவரியத்தை ஜமீன்தாரிடமிருந்து பெற்றுக் குடியானவனுக்குக் கொடுப்பாயா?— இதுவே நியாயம் வேண்டுவது. ஒன்று, சட்டத்தை எதிர்த்து நியாயத்திற்காக உழைக்க வேண்டும். அல்லது நியாயத்தை எதிர்த்துச் சட்டத்திற்காகப் பாடுபட வேண்டும். நீ எப்பக்கமிருந்து போராடுவாய்?

இன்னுமோர் உதாரணம். ஓர் தொழிலாளி. அவனுக்கு வயது முதிர்ந்த பெற்றோர், இரு சிறு குழந்தைகள். மனைவி உண்டு. இவர்களைப் பராமரிப்பது அவன் பொறுப்பு. முதலில் இவன் விவசாயம் செய்து ஜீவித்து வந்தான். அதில் போதுமான வருமானம் இல்லை. நிலவரியும் கடன் வாங்கி செலுத்த நேரிட்டது. கடைசியில் கடன்காரர்கள், நிலம், வீடு வாசல், மாடு கன்றுகளை தங்கள் வசப்படுத்திக் கொண்டு விட்டனர். நகரத்தில் பிழைக்க வந்தான். வேலை கொடுப்பார் யாருமிலர். கிராமத்திலிருந்து கொண்டு வந்த தானியமும் தீர்ந்து விட்டது. தினமும் ஒரு வேளை கிடைத்து வந்த உப்பில்லாக் கஞ்சியும் நின்று விட்டது. வீடு முழுவதும் பட்டினி. நாட்கள் நான்காயின. அன்று மாலை நேரம் பசியால் வாடும் குழந்தைகளின் முகத்தைப்பார்க்க முடியவில்லை. அவைகளுக்கு அழுகவும் சக்தி இல்லை. குழந்தையின் இந்நிலைமையைப் பார்த்தோர் யார்தான் பரிதாபம் கொள்ளார்? தொழிலாளியின் உள்ளம் சகிக்கவில்லை. வாழ்வில் ஓர்வித வெறுப்பும், ஏமாற்றமும் கொண்டவனாய் வெளியே புறப்பட்டுச் சென்றான். வழியில் ஓர் நெல் மண்டி. விதவிதமான தானியங்கள் மலைபோல் குவிக்கப்பட்டுள்ளன. பல வண்டிகளில் மூட்டை மூட்டையாய் தானியங்கள் இறக்குமதி, ஏற்றுமதியாக்கப்படுகின்றன. வாங்குவோர் விற்போரின் கூட்டம் அதிகம். நமது தொழிலாளியின் கண் முன்னே ஓர்புறம் எலும்புக்கூடும், வெளுத்த சரீரமும், வாடிய முகமும், குளிந்த கண்களும் கொண்ட குழந்தைகளும், மற்றோர் புறம் தானியக் குவியல்களும் தோன்றுகின்றன. அவன் தன் ஆயுளில் கள்ளம், கபடு, பொய், ஏமாற்றம் என்பதை யறியான். ஆனால் இன்று பசியால் வாடும் குழந்தைகளின் தோற்றம் ஒருவித தைரியத்தை உண்டாக்கியது. ஓர் குவியலிலிருந்து சுமார் அரைப்படி கேப்பையை வாரிக்கொண்டு ஓட முயன்றான். ஆனால் கடைக்காரர்கள் பிடித்துக்கொண்டனர். கெஞ்சினான், மன்றாடினான், காலில் விழுந்தான், குழந்தைகளின் நிலைமையை எடுத்துரைத்தான், அழுதான், அலறினான். ஆனால் கேட்போர் யாருமிலர். போலீசார் கையில் ஒப்புவிக்கப்பட்டான். மறுநாள் காலை ஆறுமாதம் தண்டனை கொடுக்கப் பட்டது. அவனை இழந்த வீட்டின் கதி என்ன?

அன்ப, இங்ஙனம் நாள்தோறும் கச்சேரியில் பல கேஸ்களைக் கண்ட உனதுள்ளம் திடுக்கிடவில்லையா? அனுதினமும் இப்போர்ப்பட்ட பல தீர்ப்புகளைக் கண்ட—கேட்ட உன் மனச்சாட்சி, இப்பட்சபாதம் கொண்ட சட்ட நீதியையும், நாமிருக்கும் இச் சமூகத்தையும் எதிர்த்துக் கிளம்பவில்லையா?

பள்ளிகளில் போதிக்கப்பட்ட சட்ட திட்டங்களை கிளிப்பிள்ளையைப் போல் திரும்பித் திரும்பியுரைக்காது அவைகளைச் சிறிது ஆழ்ந்து ஆலோசிக்கக் கற்றுக்கொள். அச் சட்டங்களின் மீது, உண்மையை ஒளிப்பான் வேண்டி போர்த்தப் பட்டிருக்கும் புலித்தோலை எடுத்தெறிந்து அதன் சரித்திரத்தை—பிறப்பு வளர்ப்பை உற்று நோக்குவாயேல் உண்மை புலப்படும். நீ படித்த சட்டங்கள், வலியோர்களின் கைகளில் பாமர மக்களை அடக்கியாளும் பொருட்டும், தங்கள் நாகரீகக் கொள்ளையையும், அக் கொள்ளைப் பொருள்களையும் பாதுகாக்கும் பொருட்டும் ஏற்பட்டிருக்கும் ஓர் ஆயுதம். மானிட சமூகத்தின் சரித்திரத்தை ஆராய்வாயேல், இச்சட்டங்கள், கணக்கற்ற கொலைகள், கொள்ளைகள், அநீதிகள், பாமர மக்களின் இரத்தப் பிரவாகம் முதலியவற்றின் மீது கட்டப்பட்டிருக்கின்றதென்ற உண்மையை உணருவாய். உன்னுள்ளத்தில், இப்பட்சபாதம் கொண்ட சட்டங்களின்மீது துவேஷமும், வெறுப்பும் உண்டாகும். பின் இச் சட்டங்களுக்குப் பின் கைகட்டி நிற்பதென்றால், உண்மைக்கும், தர்ம நியாயத்திற்கும், மனச் சாட்சிக்கும் மாறாகும் என்பதை அறிவாய். அப்பால் இரண்டு மார்க்கங்கள் உன் முன்னே காணப்படும். ஒன்று உண்மையையும், மனச்சாட்சியையும் உதறித்தள்ளி பாதகனாய், வஞ்சகனாய், கொடியோனாக இச்சட்டங்களுக்குப் பின்னே செல்ல வேண்டும். இல்லையேல்எங்களுடன்சேர்ந்து, நாம் நாள்தோறும் காணும் தேசிய, சமூக, பொருளாதார அநீதிகளை ஒழித்து, நியாயத்தை மானுடத்துவத்தை நிலைநிறுத்துவதற்காகப் போராடவேண்டும்.

இரண்டாம் மார்க்கத்தை என்று பின் தொடருகின்றாயோ அன்று நீ ஓர் சோஷலியலிஸ்ட். ஓர் புரட்சிக்காரன்.

(தொடரும்)

## புரட்சி செய்வோம்

(பஜனை செய்வோம் கண்ணன் நாமம்)

புரட்சி செய்வோம் துன்பம் போகும்
புந்தி யுணர்ந்திட வந்த நற்போதனை
புரிந்துட னெழுவோமே (புரட்சி)

புதுமையை மறந்த புன்மைகளகல
பொது உடமை பழகுவோமே (புரட்சி)

வழி துறையறியா மனிதராய் நாம்
இழி விதுவரையடைந் தோமே இனி (புரட்சி)

அடிமையைச் சாட அணி பெறுங்காலம்
துடியெனத் துள்ளி வந்திடுவோமே
கடமை யொடுலகினைக் காத்திட யிதுநாள்
கங்கணங் கட்டிடுவோமே (புரட்சி)

—: ப. ஜீவானந்தம்

## கவனிக்கவும்

—:O:—

நமது காரியாலயத்திற்கு எழுதும் கடிதங்கள் பத்திரிகை சம்மந்தப்பட்டதாயிருந்தால் மானேஜருக்கும், பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டியதாயிருந்தால் ஆசிரியர் என்ற விலாசத்திற்கும், தனி நபர்களுக்கு எழுதும் கடிதங்களாக இருந்தால் அவர்கள் பெயரிட்டும் எழுதவேண்டும்.

# —: பொதுஜனப் பேச்சு :—

ஆசிரியர்,

"ஜன சக்தி"

ஐயா,

தஞ்சாவூர் ஜில்லா பட்டுக்கோட்டை தாலுக்காவைச் சேர்ந்தது பெரிய கோட்டை என்ற கிராமம். நேரே சர்க்காருக்குச் சொந்தம் (திரப்பு). கிராமத்தின் வடகீழ் எல்லையாக, கன்னுறு என்ற நதி ஓடி சுமார் 3 மைல் தூரத்திலுள்ள பரமணியாற்றில் போய்ச் சேருகிறது. காவேரி மேட்டூர் பாசன ஆயக்கட்டில் எங்கள் கிராமத்தைச் சேர்கிற வரையிலும், கன்னுறுதான் எங்களுக்கு பாசனமாயிருந்தது. ஷெ ஆற்றில் இயற்கையாகவே பலவாரி கால்களும் வடிகால்களும் சேர்ந்திருப்பதால் சொற்ப மழை பெய்தாலும் வெள்ளம் பெருவாரியாக வருகிறது! இப்போது மேட்டூர் வாய்க்கால்களின் வடிகால்கள் பெரும்பாலும் இந்த ஆற்றில் வந்து விழுவதால் ஆற்றில் எப்போதும் நீர் பெருக்காகவே இருந்துவருகிறது. ஷெ ஆற்றிற்கு கரை இல்லாததால் வெள்ளக் காலங்களில் சுமார் 40 வேலி கொண்ட விஸ்தீரணமுள்ள நஞ்சை நிலங்கள் வெள்ளத்தில் மூழ்கிக்கிடக்கும். சுமார் ஒரு வாரத்திற்கு மேலும் சில சமயம் வெள்ளம் வடியாமலிருக்கும். இதைப் போலவே பிரதி மாதத்திற்கு ஒரு விசையாவது வெள்ளம் வந்துகொண்டிருக்கும். இதனல் ஷெ நஞ்சை சாகுபடிகள் கெட்டுப்போய் பெருவாரியான நஷ்டம் பிரதி வருஷமும் ஏற்படுகிறது. இதை குறித்து நாங்கள் சர்க்காருக்கு எழுதிய மகஜர்களும் மனுக்களும் எண்ணிறந்தன. சம்மந்தப்பட்ட அதிகாரிகளிடத்திலும் நேரில் சென்று முறையிட்டுக் கொள்வதும் உண்டு. ஆனல் சர்க்கார் தன் சுபாவமான சண்டித்தனத்தை கையாண்டு வருகிறதே தவிர இதற்கு நாளது வரையிலும் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. ரூபாய் ஏழாயிரத்திற்கு மேல் எங்கள் கிராமத்திலிருந்து நிலவரியாக நேரே சர்க்கார் கஜனவிற்கு போய்ச் சேருகிறது. இவ்வளவு பெருந்தொகை செலுத்தும் குடிமக்களின் கோரிக்கைகளை நிறைவேற்ருத ஒரு சர்க்காரின் போக்கை என்னவென்று நிணப்பது.

ஆகவே காங்கிரஸ் ஆட்சியிலாவது எங்கள் கோரிக்கைகள் நிறைவேறி சுகமாய் வாழலாமென நம்புகின்ருேம். முடிவாக கன்னனுற்றிற்குக் கரைகட்டிக் கொடுக்காதவரையில் நிலங்களை தரிசாக போட்டுவிட்டு கிஸ்தியும் கொடுக்கமுடியாது என்று இதனல் தெரிவித்துக் கொள்கிருேம்.

இங்ஙனம்,
பெரிய கோட்டை
கிராம விவசாயிகள்

* * *

ஆசிரியர்,

'ஜன சக்தி'

ஐயா,

யான் 20ந் தேதி 'பள்ளிமாணவர்கள் அரசியலில் தீவிரமாகக் கலந்து கொள்ளககூடாது' என் ஆக்ஞாபிக்கும் திருத்த விதிகளை கண்டு மனக்கிலேச முற்றேன். ஏனெனில் யானும் அரசியலில் கலந்துகொண்டுள்ள ஒரு மாணவனே.

நம் நாட்டின் தற்காலக் கல்வி நம் அடிமைத்தனேகளை இறுக்குகிறது; மாணவர்களுக்கு இருக்கும் ஒரு சிறிதளவு தேசீயத்தையும் போக்கடித்து விடுகிறது. அளவுகடந்த ஆர்வ முடைய தேசிய உணர்ச்சியுடைய மாணவர்கள் கிடைப்பதரிது. அவ்வாறு அரியவர் கிடைப்பின் அவர்களைத் தாய்நாட்டிற்குழைக்க முன்வரக்கூடாது எனச் சொல்லும் விதிகள் காங்கிரஸ் மந்திரிகளின் ஆட்சியில் அமுலுக்குக் கொண்டு வரப்படவேண்டுமா? 'குட்டுப் பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப் படவேண்டும்' என்பதை நிரூபிப்பது இவர்கள் எண்ணமா? தேசியத்தை மாணவர்களிடையே பரவச் செய்யக்கூடா தென்பதைக் காரியத்தில் காட்டுபவர்கள் தேசீயக் கல்வி, தேசீயக்கல்வி என்று சொல்லி மேடைப் பிரசங்கங்கள் என் செய்ய வேண்டும் என்பது எனக்கு விளங்கவில்லை.

நாம் உலகப் போக்கை யாராயின் மாணவரியக்கமின்றி ஒரு நாடும் நன்னிலேக்கு வரவில்லை என்பதைப் பிரத்யக்ஷமாய்க் காணலாம். எகிப்தின் இந்நாளேய நிலேக்கு மாணவர்களே காரணம். ஸ்பெயினிலும், சீனவிலும் இன்று ஏகாதிபத்திய வெறியர்களைப் பின் தாங்க அடிப்பதற்கு அவர்கள் செய்யும் உதவி அற்புதமானதாகும். நம் நாடும் மாணவரின் இயக்கமின்றி சுதந்திரம் பெறுது என்பது என தெண்ணம்.

தேர்தல் காலத்தில் பள்ளி வேலையைக் கூடச் சரிவரக் கவனியாது நம் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பெயரால் அங்கத்தினர்களைச்சட்ட சபைக்கு அனுப்பப் பாடுபட்ட, வருங்காலப் பிரஜைகளின் தேசிய உணர்ச்சியை அவிப்பதற்கு எத்தனிப்பது அக் காங்கிரஸ் மந்திரிகளே என்பதையுணர எனக்கு ஆச்சரியத்தை யுண்டாக்குகிறது. மாணவர்கள் எல்லாம் அரசியலுக்குவரின் சோஷியலிஸ்டு களாக மாறி விடுவார்கள் எனப் பயம், இவர்களைப் பீடித்து விட்டதா?

இப்படி யிருக்கும் நிலேயில் பணத்தை வாரி இறைத்துப் பயனற்ற படிப்பைப் படித்து பட்டங்கள் பெற்று இருப்போரின் ஹிருதயங்களை உடைக்கச் செய்யும் இச் செய்கையை எதிர்த்துக் கிளர்ச்சியைச் செய்து, மாணவ ருலகைத் தட்டியெழுப்பி 'பாரதத் தாயின்' பாக்கியத்தைக் காக்கவல்ல வீரர்களாக அவர்களை மாற்றச்செய்ய வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
ஈ. வெங்கடேசன்
பூதனபள்ளி.

---

## சென்னை இந்திய வாலிபர் சங்கம்

22-5-38ந் தேதி சென்னை இந்திய வாலிபர் சங்கத்தின் ஆதரவில் தோழர் ராஜமன்னர் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர் சி. பி. இளங்கோ "இந்தியாவும், சுதந்திரப்போராட்டமும்" என்பதைப்பற்றி பேசினர். பின் தலைவர் முடிவுரை கூற வந்தனேபசாரத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

—:O:—

## நாகை தாலூக்கா அரசியல் மகாநாடு

22—5—38ந் தேதி நாகை தாலூகா அரசியல் மகாநாடு, கீவளூரில் 'ஜன சக்தி' ஆசிரியர் தோழர் ப. ஜீவானந்தம் தலைமையில் நடைபெற்றது.

## நாகை தாலூகா விவசாயிகள் மகாநாடு

மேற்படி மகாநாடு 22-5-38ல் சென்னை காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியின் காரியதரிசி தோழர் பி. ஸ்ரீனிவாச ராவ் தலைமையில் நடைபெற்றது.

# எஸ். ஐ. ஆர். தொழிலாளர் சங்கம்

### ஈரோடு பிராஞ்சு

9-5-38 வியாழக்கிழமை மாலை 7½ மணிக்கு ஸ்ரீமான் இராமச்சந்திர ஐயர் அவர்கள் தலைமையில் ஷை சங்க மகாசபைக் கூட்டம் கூடிற்று. அதுசமயம் ஷை சங்கத்திற்கு கீழ்கண்டவர்களை நிர்வாகஸ்தர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டது:—

திருவாளர் டி. பி. புருஷோத்தமன் அவர்கள் தலைவராகவும் தோழர் ஸ்ரீ லிங்கப்பா அவர்கள் காரியதரிசியாகவும், தோழர் எஸ். சுப்பிரமணியம் உபகாரியதரிசியாகவும், தோழர் டி. எ. அந்தோணிசாமி அவர்கள் பொக்கிஷதாரராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

கீழ் கண்டவர்களைக் கமிட்டி அங்கத்தினர்களாக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருவாளர்கள் ராமன் ஆசாரி, குஞ்சு குட்டன், டி. எஸ். நடராஜன், வரதராஜுலு, எஸ். லால்சிங், ஆறுமுக கவுண்டர் எம். கோவிந்தராஜு இன்னாச்சி முத்து கே. டி. ராஜு ஆர். வி. பாண்டியன், சதாசிவம்.

மத்திய கமிட்டிக்கு தோழர்கள் எ. ஆர். ராஜகோபாலய்யர், பி. எம். சுப்பிரமணியம் ஆகியவர்கள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

—:o:—

### கொல்லம் பிராஞ்சு
#### வருடாந்திரப் பொதுக்கூட்டம்

சென்ற 17-5-38 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு ரெயில்வே தொழிலாளர்களின் வருடாந்திரப் பொதுக்கூட்டம் சங்கத்தலைவர் ஸ்ரீ என். கிருஷ்ணசாமி தலைமையில் நடைபெற்றது.

ஸ்ரீ குருசாமி நாயுடு, கிருஷ்ணசாமி, சுந்தரராஜலு, முறையே தலைவர், காரியதரிசி, பொக்கிஷதாராகவும் ஸ்ரீ ஜான் பாட்ரிக், ராமசந்திரன், பிரம நாயகம், சுப்ரமண்யம், மகமது யாகூப், நிர்வாக அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மத்திய நிர்வாக சபைக்கு ஸ்ரீ. என். கிருஷ்ணசாமி பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சங்க வரவு செலவு கணக்கு ஒப்புக்கொள்ளப் பட்டது. யூனியனை ஏஜண்டு அங்கீகரிக்கும் செய்தி யறிந்து யாவரும் சந்தோஷ மடைந்தனர்.

### ஜமீன்தார்களுக்கு ஹக் எச்சரிகை!

"வங்காளத்தில் ஜமீன்தார்கள் தவறுமேல் தவறு செய்து வருகிறார்கள். குடியானவர்களுடன் ஜமீன்தார்கள் சில ஒப்பந்தத்திற்கு வருவதில்தான் ஜமீன்தார்களில் பாதுகாப்பு இருக்கிறது. இந்த மாதிரியான வழியை பின்பற்றினால் தான் தற்சமயம் அடியோடு மறைவதினின்று ஜமீன்தாரித்வம் நீடிக்க முடியும்."

ஆகவே, இன்று வங்காள சட்ட சபையில் "வங்காள குடியானவர்கள் திருத்த சட்டம் நிறைவேறி சட்டமாகாவிட்டால் நாங்கள் ராஜினமா செய்வதைத் தவிர வேறு வழியில்லை. நான் ஏதோ பய முறுத்தலுக்காக சொல்லவில்லை. நடக்கப் போகும் விஷயத்தை சொல்லி விடுகிறேன். இந்த தீர்மானம் நிறைவேறாவிட்டால் எங்கள் ராஜினமா நிச்சயம்" என வங்காள பிரதம மந்திரி ஹக் கர்ஜிக்கிறார்.

# சென்னை டிராம்வே தொழிலாளர்கள் வெற்றி

## விசாரணைக் கமிட்டியின் ரிப்போர்ட்

சென்னை டிராம்வே தொழிலாளர்களின் கேசை விசாரணை செய்த திரு. பாண்டுரங்க ராவ் அவர்கள் தனது அறிக்கையின் முடிவில் பின்வருமாறு கூறுகின்றார்:

"விசாரணையில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஐவரும் வேலையிலிருந்து நீககப்பட்டதற்கு காரணம் அவர்கள் தங்கள் வேலையைச் சரிவரச் செய்யாததல்ல. ஆனால் அன்னார்கள் 1937 மார்ச்சு மாதத்தில் ஏற்பட்ட வேலை நிறுத்தப் போராட்டத்திலும், தொழிலாளர் சங்கத்திலும் பங்கெடுத்துக் கொண்டதற்காகப் பழி வாங்கப் பட்டிருக்கின்றனர்".

———

### அருப்புக்கோட்டை

திரு. காமராஜ் எம்.எல்.எ. தலைமையில் நெசவுத் தொழிலாளர் சர்தார் படேல் சங்கத்தார் சாலியர் மகாஜன சங்கத்தார்கள் சார்பாக கனம் மந்திரி அவர்களுக்கு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டன.

கனம் மந்திரி கூறியதாவது:- தான் தொழிலாளர் மந்திரியாக இருந்தாலும், நெசவுத் தொழிலாளர் சம்மந்தப்பட்ட வரையில் கனம் மந்திரி, முனிசாமி பிள்ளை அவர்களுக்கு, தூது கோஷ்டி போகவேண்டுமெனவும், தாமும் கூட இருந்து வேண்டுவன செய்வதாகவும், கூறினார். பூரண சுயேச்சை இன்னும் கிடைக்கவில்லை எனவும், சமஷ்டியை உடைத்து தலைமை சர்க்காரை கைப்பற்ற காங்கிரசுக்கு பலம் அதிகரிக்க எல்லோரும் உழைக்க வேண்டுமெனவும் கூறினார்.

சீன செஞ்சேனையிலுள்ள ஒரு சோல்ஜர்.

### கோயமுத்தூர் மில் தொழிலாளர் சங்கம்
#### காரியக் கமிட்டிக் கூட்டம்

15-5-38ம் தேதி ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 3-45 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் காரியக் கமிட்டிக் கூட்டம் ஷை சங்கத்தின் உப தலைவர் தோழர் எ. சுகுமாரன் தலைமையில் நடைபெற்றது. அதில் கீழ்க்கண்ட முடிவுகள் செய்யப்பட்டன.

1. சங்கம் ரிஜிஸ்டர் ஆனதும் லட்சுமி மில் ஸ்ட்ரைக்கின் போது வசூலான தொகையில் பொது வேலை நிறுத்தத்தின் சமயம் செலவான தொகைபோக மீதி ரூ.1011-0-4ஐ தோழர் ஆர். இராமசாமி (பா. நா. பாளையம்) கொடுக்க ஒப்புக்கொண்டிருப்பதாக வக்கீல் நோட்டீஸிற்குப் பதில் கொடுத்திருக்கிறபடியால் அத்தொகையை வசூல் செய்யக் கமிட்டியார் முயற்சி செய்வது.

2. ஜூன் மாதத்தில் சங்கத்தின் ஆண்டுவிழாவுடன் சங்க ஆதரவில் ஓர் தொழிலாளர் மகாநாடு நடத்துவது.

3. தொழிலாளர்களின் கோரிக்கைக்கு இணங்கி சங்கத் தோழர் என். ஜி. இராமசாமி எம். எல். எ. அவர்களை சங்கத்தில் சேர்த்து வேலை செய்யக் கேட்டுக்கொள்வது. இதற்கு தோழர் என். ஜி. இராமசாமி இணங்காத போனால், ஒத்துழைப்பதற்கு மறுத்தால் அவர்மேல் வேண்டிய நடவடிக்கை எடுப்பது.

# டிராம்வே—மின்சார சப்ளை தொழிலாளர் சங்கத்தின் 2-வது ஆண்டு விழா




சனிக்கிழமையன்று சென்னை டிராம்வே தொழிலாளர் சங்கத்தின் இரண்டாவது வருஷ விழா ஸ்ரீ. கே. வெங்கடசாமி நாயுடு தலைமையில் வி. பி. ஹாலில் நடந்தபோது எடுக்கப்பட்ட படம்.

21-5-38 மாலை விக்டோரியா பப்ளிக் ஹாலில் சென்னை டிராம்வே மின்சாரசப்ளை தொழிலாளர் யூனியனின் இரண்டாவது வருஷக் கூட்டம் ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீமதி சுபத்திரம்மாள் (சென்னை, கா. சோ. க. நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்) தொழிலாளர் சிகப்புக் கொடியை உயர்த்தி தொழிலாளர் இயக்கத்தின் சரித்திரத்தை விளக்கிக் கூறினர். கூட்டத் தலைவர் தமது பிரசங்கத்தில் எங்கும் தொழிலாளர்கள் இது வரை செய்த தற்காப்புப் போராட்டத்தை விடுத்து முன்னேறி தங்கள் உரிமைகளுக்காகப் போராடுவதை விளக்கி நீண்டதோர் பிரசங்கம் செய்தார்.

பின்னர் யூனியன் பொதுக் காரியதரிசி ஸ்ரீ. வி. எஸ். சோமசுந்தரம் வருஷ அறிக்கை வாசித்தார். ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### தீர்மானங்கள்

1. நாகேசுவரராவ் பிரிவுக்கு அநுதாபம்.

2. சென்ற வருஷம் ஸ்ட்ரைக்கில் கலந்து கொண்டதற்காக பறிமுதல் செய்யப்பட்ட சம்பள உயர்வையும், வசூலிக்கப்பட்ட அபராதத் தொகையையும் சென்னை டிராம்வே கம்பெனி திரும்ப அளிக்கவேண்டும்.

3. பார்லிஸத்தை எதிர்த்து சர்வதேச தொழிலாளர்களுக்கு ஆதரவளித்தல். பிரிட்டன் கலந்துகொள்ளும் எந்த யுத்தத்திலும் இந்தியத் தொழிலாளர் கலந்து கொள்ளலாகாது. இதர வகுப்புக்களுடனும் இந்திய தேசியக் காங்கிரஸுடனும் சேர்ந்து பூர்ண சுயராஜ்யத்தை அடைய சந்தர்ப்பத்தை உபயோகிக்கவேண்டும் என்ற தீர்மானம் தோழர் பி. ஸ்ரீனிவாசராவ் பிரேரேபணை செய்ய சோமசுந்தரத்தால் ஆதரிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேறியது.

4. சென்னை தொழில் இலாகா மந்திரி தொழில் சட்டம் இயற்ற உத்தேசித்திருப்பதற்குப் பாராட்டு. தொழிலாளரின் குறைந்த பட்ச கோரிக்கைகளை நிறைவேற்றாத எந்தச் சட்டமும் திருப்தியளிக்காது.

5. கான்பூர் முதலாளிகள் பாபு ராஜேந்திரர் விசாரணைக் கமிட்டியின் சிபார்சுகளை நிராகரித்ததற்காக கண்டித்து, தொழிலாளர்களுக்கு அநுதாபம் காட்டி தீர்மானம் தோழர் ராமமூர்த்தியால் பிரேரேபணை செய்யப்பட்டு சி. பி. இளங்கோவால் ஆதரிக்கப்பட்டு ஏகமனதாய் நிறைவேறியது.

6. வெஸ்டர்ன் இந்தியா மாட்ச் பாக்டரி, கார்டியன்பிரஸ், ஜமால் கண்ணடி தொழிற்சாலை முதலியவற்றில் ஸ்ட்ரைக் செய்யும் தொழிலாளருக்கு அநுதாபம்.

7. ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்க்கும் சீனருக்கு அநுதாபம்.

தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரம் கூறப்பட கூட்டம் முடிவடைந்தது.

—:o:—

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

வுக்கு. மெஸ்டன் பிரபுவும் சென்ற வருஷம் வந்துபோனார். அன்னார் கவர்ன்மெண்டாருக்கு எடுத்துரைத்த விளக்கம், வங்காள கவர்ன்மெண்டார் கார்ப்பரேஷன் நோட்டீஸ் கொடுக்க அனுமதி தராமலிருக்கும்படி அவ்வளவு விளக்கமாயிருந்ததாம். மெஸ்டன் பிரபு மார் தட்டிக்கொள்கின்றார். வங்காள அஸெம்பிளியில் ஜனவரியில் கொண்டுவரப்பட்ட பிரேரணையும் தோற்றுவிட்டது.

சென்னை டிராம்வே கம்பெனியின் ரிபோர்ட்டைப் பற்றி எழுதும்பொழுது நாம் சட்ட ஆதரவும், நீதி நிலையும் எவ்வளவு பிரிட்டிஷ் முதலாளித்துவத்துக்கு பாதுகாப்பளிக்கிற தெனத்தெரிவித்தோம். காங்கிரஸல்லாத பிரதிநிதிகள் மெஜாரிட்டியுள்ளதும், பிற்போக்கான மந்திரி சபையுமான வங்காள மந்திரி சபை எவ்வாறு அவ்வாதரவை நிலைநிறுத்துகிற தென்பதைக் காண்கின்றோம். அவ்வாறல்லாமல் பிரிட்டிஷ் முதலாளித்வத்தையும், ஏகாதிபத்தியத்தையும் திடமாக எதிர்ப்பது காங்கிரஸ் பதவி வகிப்பதின் முதற் கடமை. தொழிலாளர்கள் இயக்கமும், காங்கிரஸ் சபைகளும் இதை மறக்கமாட்டாராக.

# ‘கோவை தொழிலாளர் சம்பளத்தில் உயர்வு’

## ‘100-க்கு 5 முதல் 25 வரை சம்பளம் உயர்த்தவேண்டும்’

### விசாரணைக் கமிட்டியின் தீர்ப்பு

சென்ற அக்டோபர் மாதத்தில் நடந்த கோயமுத்தூர் வேலை நிறுத்தத்தின் பயனாய் தொழிலாளர்களின் குறைகளை விசாரித்து அவைகளைப் போக்கும் வழிகளைக் கண்டு பிடிக்க சென்னை காங்கிரஸ் கவர்ன்மெண்ட் ஸ்ரீ வெங்கட்ராமய்யாவை டிசம்பர் மாதம் 29ந்தேதி நியமித்தனர். அவ் விசாரணைத் தீர்ப்பு கவர்ன்மெண்டாரால் வெளியிடப் பட்டிருக்கின்றது. காங்கிரஸ் அரசாங்கம், தனது அறிக்கையில் மில் சொந்தக்காரர்கள் தொழிலாளர்களின் கூலியை உடனே உயர்த்த வேண்டுமென்றும் அவர்கட்கு சில லீவு வசதிகள் கொடுக்கவேண்டுமென்றும் எடுத்துக் கூறுகின்றது.

திரு. வெங்கட்ராமய்யாவின் முடிவுகள் முழுவதும் இங்கே கூற போதிய இடமில்லையாதலின் அவைகளில் முக்கியமானவற்றை சுருக்கிக் கூறுகின்றோம்.

கோவையில் மில் தொழில் 1932லிருந்து 1937க்குள் மிகவும் அதிகரித்திருக்கின்றது. 1932ல் இங்கு 8 மில்கள் இருந்தன. இன்றோ 25 மில்கள் இருக்கின்றன. 1932 ல் 6,500 தொழிலாளர்கள் மில்லில் வேலை செய்தனர். இன்று அவர்களின் எண்ணிக்கை 25,700 ஆகும். ஆனால் அன்னார்களுக்குச் சரியான வீடு வசதிகள் கிடையாது. பொருளாதார நெருக்கடியினின்று தப்பிப்பான் வேண்டி ஏழை மக்களை குறைந்த கூலிகளுக்கு அமர்த்தி, லாபத்தைப் பெருக்கிய மில் முதலாளிகளோ அல்லது பொது ஜன வசதிகளைச் சரிவர கவனிப்பதாகச் சொல்லும் முனிசிபாலிடியோ அன்னாரது வீடு, சுகாதார வசதிகளைச் சிந்திக்க விரும்பவில்லை. “வைத்திய உதவிகள் விஷயத்தில், முதலுதவி (first-aid) கருவிகளும் போதுமான அளவு இவ்வூரில் இல்லையென நன்கு வ்ளங்குகிறது.” என்று ரிப்போர்ட் கூறுகின்றது.

முதலாளித்வத்தின் கீழ் வளரும் தொழிற்சாலைகளின் விருத்தியில் மக்களுக்கு ஏற்படும் கொடுமைகளைப் பற்றி, விஞ்ஞான சோஷியலிஸத்தைக் கண்டு பிடித்தவர்களில் ஒருவரான ப்ரேடரிக் எங்கல்ஸ் “1844-ம் வருஷத்தில் இங்கிலீஷ் தொழிலாளர்களின் நிலை” என்ற புஸ்தகத்தில் விளக்கி எடுத்துரைத்திருக்கின்றார். முதலாளித்வ வளர்ச்சியுடன் பெரிய பட்டணங்களின் உற்பத்தியும், நகரங்களில் ஜனத் தொகை, அதிகரிப்பும், தொழிலாளர் சேரிகளின் கேவல நிலைமையும், எங்கனம் பிணைக்கப்பட்டிருக்கின்றதென்று நன்கு விளக்கி யிருக்கின்றார். இவைகளைக் கோவையில், அந்நகரின் வளர்ச்சியை ஆராய்வோர் ஒவ்வொருவரும் காணலாம். மற்றும் கவர்ன்மெண்ட் ரிபோர்ட்டுகளும், விசாரணைக் கோர்ட்டு ரிபோர்ட்டும் இந்நகரில் முதலாளித்வ வளர்ச்சியின் கோரத்தை நன்கு விளக்குகின்றது.

12 வயதுக்குக் குறைந்த குழந்தைகள் பல மில்களில் அமர்த்தப் படுகின்றனர். ஏற்கனவே பெரிய ஆட்களுக்குக் கொடுக்கப்படும் கூலி குறைவு. அதையும்விட குறைவான கூலி கொடுத்து அதே வேலையை சிறுவர்களிடமிருந்து பெறலாம் என்ற எண்ணங் கொண்டு 4,300 சிறுவர்களும் சிறுமிகளும் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கின்றனர். ஆகவே ரிப்போர்ட், இவ்விஷயத்தில் மில் மானேஜ்மெண்ட் அதிக சிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டும் எனக் கூறுகின்றது. “சிவறுர்களுக்கு இரவு வேலையே கூடாது. பெரியவர்கள் இரவு வேலை செய்வதற்கு 100-க்கு 20வீதம் அதிகக் கூலி கொடுக்க வேண்டும்” என்பது அறிக்கையின் ஒரு முக்கியமான முடிவு.

மற்றும் “தொழிலாளர்களின் கல்வி விஷயத்தில் மில் முதலாளிகள் இதுவரை ஒருவித ஏற்பாடும் செய்யவில்லை” என்றும், “அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வது அவசியம்” என்றும் கூறுகின்றது.

“சம்பள விஷயத்தில் 1933-ல் 100-க்கு $12\frac{1}{2}$ வீதம் ஒரு சம்பள வெட்டு ஏற்பட்டதென்று மில் முதலாளிகளின் பிரதிநிதி திரு. கந்தசாமியும் சொல்லியிருக்கின்றார். மதுரை, சென்னை முதலிய விடங்களுடன் கோவைச் சம்பளத்தை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இவ்வூரில் சம்பளம் மிகவும் குறைவாகவே யிருக்கின்றது. ஒரு தொழிலாளியின் குடும்ப வாழ்க்கைக்கு ரூ. 15 முதல் 25 வரை மாதம் ஆகுமென தொழிலாளர்கள் கூறியிருக்கின்றனர். மில் முதலாளிகள் தாங்கள் கொடுக்கும் சம்பளங்கள் இந்நகர் வாழ்க்கைச் செலவுக்குப் போதுமானதென ருஜூப்படுத்த ஓர்வித அத்தாக்ஷியும் கொடுக்கவில்லை.”

கோவையில் குறைந்த கூலி கொடுக்கப்படுவதற்கு காரணம் அறிக்கை கூறுகின்றபடி, முதலாளிகள் கூறியவையும் “இந்நகர் வாழ்க்கைச் செலவின் குறைவோ, தொழிலாளர்களின் வேலைச் சாமார்த்தியக் குறைவோ அல்ல”. ஆனால் 1929ம் வருஷத்தில் ஏற்பட்ட உலகப்பொருளாதார நெருக்கடியிலிருந்து தப்பிக்க முதலாளிகள் செய்த முயற்சியே யாகும். இந்நெருக்கடியில் விவசாயிகள் மிகவும் கஷ்டப்பட்டனர். ஏற்கனவே கேவல நிலைமையில் வாழும் விவசாயிகளின் நிலைமை இன்னும் அதிகம் மோசமடைந்தது. மற்றும் ஜப்பானியப் போட்டியால் 1932-34ல் கை நெசவுக்காரர்களின் மேல் இடி விழுந்தது. இவர்களும் ஏகாதிபத்திய முதலாளித்துவத்தின் முன் நிற்க முடியாமல், தங்கள் தொழில்களை விட்டு, நகரகளில் தங்கள் உழைப்பை விற்க முன் வந்தனர்.

முதலாளிகள் இதை அநுகூலமாகக்கொண்டு, மிகக்குறைந்த சம்பளத்தில் ஆட்களை யமர்த்தி மேலும் மேலும் குறைந்த சிலவில் சமான்களைத் தயாரித்து, நெருக்கடியின் பாரத்தை மக்களின் மீது சுமத்தி தங்கள் லாபத்தை வளர்த்தனர்.

இங்ஙனம் கிடைத்த ஊதியத்தினால் “கோவை மில் ஒவ்வொன்றும் 100க்கு 6 பங்குக் குறையாமல் டிவிடென்ட் கொடுத்திருக்கின்றன” அதுமட்டுமல்ல 1932க்குப் பிறகு திறக்கப்பட்ட மில்கள் எல்லாம் ஆரம்ப முதல் உயர்ந்த டிவிடென்ட்கள் கொடுத்திருக்கின்றன வென்பது குறிப்பிடத் தக்கது.” “உற்பத்திச் செலவில் (Cost of Production) தொழிலாளர்களின் சம்பளம் 100க்கு 15 பங்குக்கு மேலில்லை. ஆதலால் 100க்கு 50 பங்கு சம்பள உயர்வு கூட உற்பத்தி சிலவின் ஏனைய பாகங்களை பாதிக்காது” இம் முடிவிற்கு வந்த அறிக்கை கீழ்க் கண்ட சிபார்சுகளை ஜூன் 1-ந் தேதிக்குள் அமுலுக்கு கொண்டு வர வேண்டும் எனக் கூறுகின்றது.

1. சாமர்த்திய தொழிலாளர்களுக்கு (for skilled workers) மாதம் 13 ரூபாய்க்குக் குறையாமல் சம்பளமும் 2 ரூபாய் அட்டன்டென்ஸ் போனஸும் கொடுக்க வேண்டும்.

2. “மற்றைய சாதாரண தொழிலாளர்களுக்கு (ரீலர்கள் தவிர) 11 ரூபாய்க்குக் குறையாமல் மாதச் சம்பளமும் 1 ரூபாய் அட்டன்டென்ஸ் போனஸும் கொடுக்க வேண்டும்.”

3. “ரீலர்களுக்கு.— ஜனவரி முதல் தேதி சம்பளத்தைவிட இன்னும் 25% அதிகச் சம்பளம் கொடுக்கவேண்டும்.”

4. “சிறுவர்களுக்கு.—ஜனவரி 1ந் தேதி சம்பளத்தைவிட இன்னும் $12\frac{1}{2}$% அதிகச் சம்பளம் அளிக்கவேண்டும்.”

“மாதச் சம்பளம் சராசரி ரூ. 15க்குக் குறைந்தவர்களுக்கு 100க்கு 15 விகிதம் உயர்வும் ரூ. 15—20 வரையில் 100க்கு 10 விகிதம் உயர்வும் கிடைக்க வேண்டும். ஆனால் அவர்கள் சம்பளம் மாதம் ரூ. 20-க்கு மேற்படக் கூடாது.”

“ரூபா 20 - 30 வாங்குபவர்களுக்கு 100க்கு 5 விகிதம் உயர்வும் கொடுக்கவேண்டும்.”

“இன்னும் உயர்ந்த சம்பளங்கள் கொடுக்கக் கூடுமென்றாலும் நான் வேண்டுமென்றே தான் அவ்வளவு அதிகத்திற்கு சிபார்சு செய்யவில்லை.”

‘அவசரக் காரியங்களுக்கு மில்கள் வருஷத்தில் 6 நாட்கள் தொழிலாளர்களுக்கு லீவு கொடுக்க வேண்டும். வருஷத்தில் ஒன்பது நாட்கள் சம்பளத்துடன் தேக அசௌகர்ய லீவு கொடுக்க வேண்டும்’.

ஆண் தொழிலாளர்கள் செய்யும் வேலையில்பெண்களை அமர்த்தும் பட்சத்தில் பின்னையோர்களுக்கும் முன்னையோர்களுக்கு அளிக்கப்படும் அதே அளவு சம்பளம் கொடுக்கவேண்டும்.

பீஸ் ரேட் தொழிலாளர்கள் அடிக்கடி அவர்கள் செய்யும் வேலைகளிலிருந்து, மேஸ்திரி முதலியோர்களின் இச்சைப்படி குறைந்த சம்பளம் கிடைக்கப்படும் வேலைக்கு மாற்றப்படுகின்றனர். கெட்ட எண்ணங்களுடனோ, தொழிலாளர்களைத் தண்டிக்க வேண்டுமென்ற கருத்துடனோ இங்ஙனம் செய்யும் பட்சத்தில் அது நியாயமாகாது. ஆகவே இங்ஙனம் ஏற்படும். செய்கைகளைத்தடுக்க ஓர் தொழிலாளர் கமிட்டி நியமிக்கப்பட

(17-ம் பக்கம் பார்க்க)

# 'கோவை தொழிலாளர் சம்பளத்தில் உயர்வு'

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

வேண்டும். அது தொழிலாளிகளினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும், பொறுப்பு வாய்ந்த மில்ஆபீசரும் கொண்டதாய் இருக்கவேண்டும்.

பெண் பிள்ளைகளுக்குச் சிசு பரிபாலன வசதிக்கு அளிக்கப்படும் (Maternes Benefit), சரிவர கொடுக்க வேண்டியதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் தேவை என்று குறிப்பிட்டிருக்கின்றார். "எல்லா மில்களிலும் ஒரே மாதிரியான வேலைக்கு ஒரே விகிதமான சம்பளம் கொடுக்க வேண்டும். மில்களில் வைக்கப்பட்டிருக்கும் கடிகாரங்கள் பல சமயங்களில் திருப்பப்படுவதாக தொழிலாளிகள் கூறுகின்றனர். எல்லா மில்களிலும் ஒரே மணி காட்டக்கூடிய எலெக்ட்ரிக் கடிகாரங்கள் வைக்கவேண்டும்."

எட்டு மணி வேலை நாள் விஷயத்தில் விசாரணைக் கோர்ட்டு அதன் அவசியத்தை ஒப்புக்கொண்டாலும், ஏனைய மாகாணங்களிலும் அதை அமுலுக்குக் கொண்டுவந்தால்தான் இங்கும் கொண்டுவரலாம் என்று கூறிவிட்டது.

தொழிற் சங்க அங்கீகார விஷயத்தில் விசாரணைக் கோர்ட்டு, ரிஜிஸ்தர் செய்யப்பட்ட சங்கங்களை அங்கீகாரம் செய்யவேண்டுமென்று கூறியிருக்கின்றனர். மில் முதலாளிகள் இத்துடன் இரண்டு நிபந்தனைகளை ஏற்படுத்த விரும்பினர்: அவை:—(1) "சங்கம் தொழிலாளிகளாலேயே நடத்தப்படவேணடும்; (2) சங்கங்கள் வகுப்புப் (Class) பகையையும், தொழிலாளர்கள் சண்டையையும் விருத்தி செய்யக்கூடாது" என்பதுமாகும். இவ்விரு நிபந்தனைகளையும் மறுத்துவிட்டார் விசாரணைக் கோர்ட்டார். தொழிலாளர்கள் தற்கால நிலையில் தொழிற்சங்கங்கள் அவர்களால் மட்டும் நடத்தப்பட முடியாது.

இரண்டாம் நிபந்தனை சம்பந்தமாய் ரிப்போர்ட் பின்வருமாறு கூறித் தள்ளிவிட்டது: "தொழிலாளர் சங்கங்கள் வகுப்புத் துவேஷத்தையோ, வகுப்புச் சண்டைகளையோ ஆதரிக்கக்கூடாது என்று சொல்வது தொழிலாளர்களின் வாக்குச் சுதந்திரத்தை கட்டுப்படுத்தலாகும்.......ஆகவே எந்தச் சங்கமும் இம்மாதிரியான வாக்குறுதியைக் கொடுக்க முடியாது."

வேலை நிறுத்தம் செய்யு முன் தொழிலாளர்கள் 14 தினங்கள் அல்லது ஒரு மாதம் நோட்டீஸ் கொடுக்க வேண்டுமென்று முதலாளிகள் கேட்டனர். அம்மாதிரி நோட்டீஸ் கொடுத்தால் முதலாளிகள், அவ் இடைக்காலத்தை அனுகூலமாகக்கொண்டு புதிய புதிய ஆட்களை அமைத்து தொழிற் சங்கக் காரியங்களில் முன்னேறியிருந்து வேலை செய்யும் மக்களை வேலையிலிருந்து நீக்கி, தொழிலாளர் இயக்கத்திற்கு தீங்கு விளைவிக்காமலிருக்க வாக்குறுதி கொடுக்கும்படி முதலாளிகளைத் தொழிலாளர் பிரதிநிதிகள் கேட்டனர். அதை முதலாளிகள் மறுத்துவிடவே, அன்னார்களின் இந்த கோரிக்கை ஓர் கெட்ட எண்ணத்துடன் கேட்கப்படுகின்றதென்பதாக அறிக்கை அபிப்பிராயப்படுகிறது.

மற்றபடி சப்பள விஷயங்களைத் தீர்ப்பு செய்ய ஒரு சப்பள நிருபன சபை (Wages Fixation Board) ஏற்படுத்த வேண்டுமென்றும், ஸ்ட்ரைக் ஆரம்பிக்குமுன் எல்லாவித சமரச வழிகளும் முயற்சிக்கப்பட வேண்டுமென்றும் கூறியிருக்கின்றது.

இவ்வளவு நாட்களுக்குப் பின் வெளிப்படுத்திய விசாரணைக் கோர்ட் ரிபோர்ட் மூலம் கோவைத் தொழிலாளிகளின் கஷ்டங்கள் உண்மையென்றும், நியாயமென்றும், நன்கு புலப்படும். ரிபோர்ட்டையும் கவர்ன்மெண்டார் கடமையையும், நமது அபிப்ராயங்களையும் அடுத்த வாரத்தில் கூறுவோம்.



# சூளை மில் தகராறு

(o)

## சமரச போர்டின் தீர்ப்பு

சூளை மில்லில் வேலை நிச்சயமான தொழிலாளிகள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கப்பட்டு பதில் ஆட்களாக மாற்றப்பட்டு, தங்களுக்கு இருந்த சில வசதிகளையும் இழந்து வந்தனர். இதனால் ஏற்பட்ட ஸ்ட்ரைக் முடிவை விசாரணை செய்வதற்காகச் சென்னை கவர்ன்மெண்டார் "சமாதான போர்டு" ஏற்படுத்தினர். அப்போர்டார் ரிப்போர்ட்டு 24—5—38ல் வெளியிடப்பட்டிருக்கின்றது.

மேற்கூறிய ரிபோர்ட்டு ஏனைய ரிப்போர்ட்டுகளை எல்லாம் விட மிகவும் விசேஷமாகத் தொழிலாளிகள் கவனிக்க வேண்டியதாகும். ஏனெனில், அதில் தலையிலிருந்து கால்வரை முதலாளிகளின் யோக்கியதை, உயர்வு, நியாயம் என்ற எண்ணமும், தொழிலாளிகள் கூறும் விஷயங்களைப்பற்றி சந்தேகமும், அருவருப்பும் அலட்சியமுமே காணப்படுகின்றன. இதற்குக் காரணம் மதராஸ் லேபர் யூனியனின் பலக்குறைவே. சூளை மில் தொழிலாளிகளின் தொழிற் சங்கம் வலுத்து, தொழிலாளிகளின் இயக்கமும் பலமாயிருந்தால் சமாதான போர்டார் சூளைமில் முதலாளிகள் சொல்வது வேத வாக்கென்று கூறியிருக்கமாட்டார்கள்.

மில்லில் 2144 வேலையாட்கள் வேலை செய்கின்றனர். இதில் 1550 ஆட்கள் பர்மனெண்ட் ஆட்கள். 550-க்கு மேல் பதில் வேலைக்காரர்கள். இந்த வித்தியாசம் 1932-லிருந்து ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. பதில் ஆட்களுக்குச் சப்பளம் குறைவு. 15 நாட்களுக்கு அரைச் சம்பளத்தில் லீவும், சம்பளத்துடன் கொடுக்கப்படும் திருவிழா லீவுகளும் கிடையாது. பதில் வேலைக்காரர்களுக்கும் பழைய பர்மனெண்ட் நிலை கொடுக்க வேண்டுமென்று நடந்த விசாரணை தீர்ப்பில், சமாதானபோர்டார் இனிமேல் எடுக்கும் தொழிலாளிகள், பர்மனெண்ட் தொழிலாளிகளுக்குக்கூட, தற்சமயச் சம்பளத்தைவிடக் குறைந்தசம்பளமும், லீவுவசதிக் குறைவும் ஏற்படுத்திவிடலாம் என்று கூறியிருக்கின்றனர். இதினின்று சமாதான போர்டாரின் உதாரகுணத்தை நன்கறியலாம்.

பதில் வேலைக்காரர்கட்கு 'டின் பாஸ்' கொடுத்துவிடுவதால் ஒன்றும் கெட்டுவிடாது. தொழிலாளிகள் தங்கள் நிலைமை கௌரவமென மனதில் நினைத்துக்கொள்வார்கள். மில்லுக்கு இது ஒன்றும் செலவில்லை என்று தீர்மானித்திருக்கின்றனர். லீவ் தினத்தில் அவர்களுக்கு 5 அணு 4 பை வீதம் கொடுக்கவேண்டும். மேலும் வருஷத்தில் 270 நாட்கள் வேலை செய்தவர்கட்கு ஏழு நாட்கள் பிரிவிலேஜ் லீவு கொடுக்க வேண்டுமென சிபார்சு செய்திருக்கின்றனர்.

தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்டவை இவைதான். அதிலும் இவை கொடுப்பதற்குக் காரணம் என்னவென்பதை நோக்குவோம். முதலாளிகள் கொடுக்கக்கூடிய நிலையிலில்லாவிடினும், தொழிலாளிகள் அடங்கி, சற்று அமைதியாக இருப்பதற்குத் தான் என்று சொல்லிவிட்டார்கள். தொழிற் சங்கத்தாரும் மில் முதலாளிகளின் 'தர்ம சிந்தனையை' எடுத்துரைக்க வேண்டுமாம். தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படும் சிறு வசதிகளெல்லாம் தர்மங்கள் என்ற எண்ணமும், முதலாளிகள் செய்வது சரியென்ற எண்ணமுமே போர்டாரின் சங்கப் பலகையாயிருக்கின்றது.

இந்த தர்மப் பேச்சும் எந்த மட்டும் உண்மை என்பதை நோக்குவோம். பதில் ஆட்கள் தவிர மில்லில் தற்காலீக பதில் ஆட்கள் சிலர் தினம் தினம் வாயிலில் வேலைக்குக் கார்த்துக் கொண்டிருப்பார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் தினம் திரும்பிவிட வேண்டியதே. பல நாட்களில் வெகு நேரம் காக்கவேண்டும். ஆனால் போர்டாருக்கு முதலாளிகள் பேச்சு வேத வாக்கு. 7 மணிக்கு வந்தால் 7¼ மணிக்குள் எத்தனை ஆட்களுக்கு வேலையுண்டெனத் தெரிந்துவிடுமாம். ஏனையவர் காக்காமல் திரும்பிவிடலாமாம்! இவர்களது ஸ்திதியைப்பற்றி ஒன்றும் செய்ய முடியாது என்றும் கூறிவிட்டனர். தர்ம சிந்தனைக்காரர்கள் ஏன் இவ்வாறு கதியற்றவர்களைக் கைவிட்டுவிட வேண்டுமோ தெரியவில்லை. முதலாளித்வத்தின் நியாயமும், தர்மமும், நலமும், முதலாளிகளின் நலத்திற்கேற்றவைகளே யன்றி, ஏழை மக்கள் நலத்திக்கல்ல.

———

# சோவியத் ரஷியாவில் மக்கள் கலைப் பயிற்சி

—(o)—

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

தீட்டின ஓவியங்களைக் காட்சி வைக்கிறார்கள். மாஸ்கோ உல்லாசக் கலைப்பொழிலில் அமைச்சூர்கள் செய்த அனேக கலைப் பொருள்கள் இப்பொழுதும் காட்சியில் வைக்கப்பட்டிருக்கின்றன. மொத்தம் வைக்கப்பட்டிருக்கும் 6000 கலைப்பொருள்களிலே, வர்ண ஓவியங்கள் 600 இருக்கின்றன. இந்த பாமரக் கலைவல்லுநர் எண்ணெய், சுண்ணும்பு, மரம், நூல் முதலிய பற்பல பொருள்களிலும் அவர்கள் கைத்திறனைக் காட்டி அருமையான உருவங்களைப் படைக்கின்றனர்.

1936ல் தோழர் ஸ்டாலின் எடுத்துக்கொண்ட முயற்சியின் பயனாக, மாஸ்கோ நகரில் பொது மக்களின் கலை மண்டபம் ஒன்று திறக்கப்பட்டது. இங்கே தொழிலாளரும் கூட்டுறவுப் பண்ணை விவசாயிகளும், செஞ்சேனை வீரர்களும் தங்கள் இசைத்திறன், நடனத்திறன், நடிப்புத்திறன் முதலிய கலைத் திறன்களை யெல்லாம் வளர்க்கின்றனர். இந்த மண்டபம் திறக்கப்பட்டதிலிருந்து சோவியத் நாட்டின் பல்வேறு பாகங்களிலுமிருந்து பல்லாயிரம் பேர் தங்கள் கலைத்திறனைக் காட்டிச் செல்கிறார்கள்.

### கலைகளை ஊட்டுவது ரேடியோ

பாமர மக்களுக்குக் கலைகளை ஊட்டுவதில் மிகப் பயனுடையது ரேடியோவே ஆகும். அறுபது பெரிய ரேடியோ நிலையங்களிருக்கின்றன. அவற்றின் மூலமாகப் பலகோடி மக்கள் தங்கள் தங்களுக்கு விருப்பமான விஷயங்களைக் கேட்டானந்திக்கிறார்கள். ஸ்டாலின் வகுத்த அரசியல் திட்டம், தேர்தலின் புதுவிதிகள், போன்ற அரசியல் விஷயங்களைக் கவனிப்போர் சிலர்; இலக்கியம், விஞ்ஞானம் முதலியவற்றைப் பற்றிய சொற்பொழிவுகளுக்குச் செவி சாய்ப்போர் சிலர்; தேனினுமினிய சங்கீத ஒலியைப் பருகுவார் சிலர். சோவியத்து சபைகளின் எட்டாவது விசேஷக் காங்கிரஸின் முன்பாக சோவியத்தின் புதிய சீர்திருத்தத்தைப் பற்றி தோழர் ஸ்டாலின் ரேடியோ மூலம் பேசின அந்நாள், ரேடியோ சரித்திரத்திலேயே ஒரு பெரு நாளாகவிளங்கினது,

### உடற் பயிற்சி

"உடம்பை வளர்த்தாரே அறிவை வளர்த்தார்" என்ற உயர்ந்த லட்சியத்தை சோவியத் நாட்டைத் தவிர வேறெங்கும் நடைமுறையில் பார்க்க முடியாது. ஆண்களும் பெண்களுமாக கோடி மக்கள் உடற்பயிற்சி சங்கங்களில் உறுப்பினராயிருந்து வருகின்றனர்.

### பிரயாணச் சங்கம்

விடுமுறைக் காலங்களிலே தொழிலாளர்கள் காக்கஸிலும் கிரிமீயாவிலும் அமைக்கப்பட்டிருக்கும் ஓய்வு விடுதிகளுக்குச் செல்கின்றார்கள். அதை விரும்பாத போது, அவர்கள் அழகான காட்சிதரும் இடங்களுக்கெல்லாம் யாத்திரை செய்கிறார்கள். இதற்கென்று 'உழைப்பாளி யாத்திரைச் சங்கம்' என்று ஒரு அமைப்பு ஏற்பட்டிருக்கிறது. மிகுந்த சொற்பச் செலவில் காக்கஸ், கிரிமியா, யுரால்மலை, காஜக்ஸ்டான் முதலிய பிரதேசங்களிலுள்ள கண் கவரும் வனப்பு வாய்ந்த இடங்களுக்கெல்லாம் பிரயாணம் செய்ய வேண்டிய வசதிகளை மேற்படிச் சங்கம் செய்து கொடுக்கின்றது.

"வர்க்கப் போராட்டத்திலேயே நிகரற்ற வன்மையும் கூர்மையும் கொண்ட கருவி" பத்திரிகை என லெனின் கூறியிருக்கிறார். ஜார் ஆட்சி காலத்திலே 859 பத்திரிகைகள் இருந்தன. 1936ல் சோவியத்து நாட்டில் 9,250 பத்திரிகைகள் இருந்தன; அவற்றைப் படிப்பவர்கள் 3 கோடி 70 லட்சம் பேர்கள் இருக்கிறார்கள். இவற்றுள் 1974 ஆலைப்பத்திரிகைகள்; 21, 124 கூட்டுறவுப் பண்ணைப் பத்திரிகைகள்; 239 மாணவர் பத்திரிகைகள் ஆகும்.

### கலைத் தாகம்

சோவியத் ஐக்கிய ரஷிய நாட்டிலே மக்கள் அறிவுக் கடலைப் பருக விரைகிறார்கள். அறிந்ததைநடை முறையில் ஆற்றிக் காட்ட விரும்புகிறார்கள். ஞானம், கல்வி, இசை, கலை, இலக்கியம் போன்ற மனித வர்க்கம் படைத்த அழியாச் செல்வங்களைப் (பருகுவரன்ன ஆர்வத்தராகி) சேர்க்கிறார்கள்.

—:o:—

# கான்பூர் தொழிலாளர் போர்

—(o)—

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

தியடையக் கூடிய மில் கமிட்டிகள் ஏற்பட்டிருப்பதும் தவறென்று விசாரணைக் கமிட்டியார் ஓரிடத்தில் கூறுகின்றனர். அச்சமயத்தில் இருந்த மஸ்தூர் சபையின் தலைவர்களின் பிற்போக்கைத் திருப்புவதற்கென்று உதித்த இக்கமிட்டிகள், சபை நிர்வாகக் கமிட்டிக்கு மேலும், மீறியும் சில சமயம் நடந்து, அந் நிர்வாகக் கமிட்டியையும் முன்னேக்க மடையச் செய்திருக்கின்றன. இதையறியாது மில் கமிட்டிகளைக் கண்டனம் செய்திருப்பதற்குக் காரணம் மேற்கூறிய கொள்கையே.

### சில சீர்திருத்தங்கள்

மஸ்தூர் சபையின் நிர்வாகத்திலேயே சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று தெரியப்படுத்தியிருக்கின்றனர். தேர்தல்கள் "ரகஸ்ய வோட்" மூலம் நடக்க வேண்டுமென்றும்; நிர்வாகக் கமிட்டியானது பாகம் பாகமாக வருடா வருடம் தேர்ந்தெடுககப்பட வேண்டுமென்கின்றனர்.

வேலை நிறுத்தம் விஷயத்திலும் நிர்வாகக் கமிட்டியாரும் அங்கத்தினர்களும் "ரகஸ்ய பாலெட்" மூலம், மூன்றிற்கிரண்டு பங்காகத் தீர்மானம் செய்ய வேண்டுமென்கின்றனர். மில் கமிட்டிகள் தொழிற்சாலையிலுள்ள கூலி முறை முதலியவைகளைப் பற்றி சமாசாரம் கொடுக்கலாமேதவிர தாமாகவே ஒரு காரியமும் செய்யக் கூடாதென்று கூறுகின்றனர். சங்கத்தின் நிர்வாகம் உண்மையில் ஜனநாயக முறையில் நடந்தால் மில் கமிட்டிகள் தனியே ஒரு விதக் காரியத்தையும், ஆரம்பம் செய்ய முயலாது.

எவ்விதக் கொள்கை கொண்டு நோக்கினும் உண்மை விஷயத்தை மறுக்க முடியாது. விசாரணைக் கமிட்டியாரே மஸ்தூர் சபையின் அங்கத்தினர்கள் 3000 னின்று 12000மானதை ஏற்றுக் கோண்டு முடிவில் முதலாளிகள் சோல்லும் கரரணம்—மஸ்தூர் சபை தொழிலாளிகளின் சரியான சங்கமல்ல—சரியானது அல்லவேன்று கூறுகின்றனர். மேலும் "தொழில் ராயல் கமிஷன்" (Royal Commission on Labour) ரிபோர்ட்டிலேயே தொழிற் சங்கம் வொழிலாளிகளுக்கு மொத்தமாக வேலை செய்யவில்லை என்று கூறும் வாதத்தின் தவறை எடுத்துச் சொல்லி யிருக்கின்றனர்.

### தொழிற்சங்க அங்கீகாரம்

ஆதலால் மஸ்தூர் சபையை மேற்கூறிய சில சீர்திருத்தங்களுடன் அங்கீகாரம் செய்யவேண்டுமென்று கூறி யிருக்கின்றனர். ரிஜிஸ்டர் செய்யப்பட்ட தொழிற் சங்கங்களை அங்கீகாரம் செய்ய வேண்டுமென ஒரு சட்டம் வேண்டுமெனச் சிலர் கூறியதற்கு, கமிட்டியார் தற்சமயத்தில் அதை ஆதரிக்கவில்லை. முதலாளிகள் தொழிலாளிகளிடத்தும், அவர்களது சங்கத்தினிடத்தும் செலுத்தும் மனப்பான்மையைக் கவனித்தால் இவ்விதச் சட்டம் கட்டாயம் வேண்டும் என்பதிற் சந்தேகமில்லை. சட்டக் கட்டாயமே முதலாளிகளுக்கு லட்சயமில்லை. ஆயினும் பொது ஜனங்களேனும் அவ்வித சட்டமிருப்பின் முதலாளிகளின் அநீதிகளை நன்கறியக்கூடும்.

(தொடரும்)

தொழிலாளர் உலகம்

# எங்கும் வேலை நிறுத்தம்

## சென்னை

கார்டியன் பிரஸ் தொழிலாளர்கள் 19-ம் தேதி கீழ்க்கண்ட கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்தனர்:—

(1) கம்பாஸிட்டர் துரைக் கண்ணை வேலையில் அமர்த்திக் கொள்ள வேண்டும்.

(2) ஒரு நாள் வேலைக்கு வராமற்போனால் இரண்டு நாள் கூலியைப் பிடித்துக் கொள்ளக் கூடாது.

(3) வருடத்தில் 15 - நாள் 'காஷிவல் லீவ்' (Casual leave) கொடுக்க வேண்டும்.

(4) 17 வயதிற்கு குறைந்த பையன்களை 5 மணி நேரத்திற்கு மேல் வேலை செய்ய வைக்கக் கூடாது.

(5) மாதச் சம்பளமும், ஓவர் டைம் சம்பளமும் மாதாமாதம் சரிவரக் கொடுக்க வேண்டும்.

(6) சங்கத்தில் சேருவதற்காகவோ, தீவிரமாய் சங்கத்தில் உழைப்பதற்காகவோ பழிக்குப் பழி (Victimisation) வாங்கக் கூடாது.

(7) மதராஸ் பிரஸ் லேபர் யூனியனை அங்கீகாரம் செய்ய வேண்டும்.

22-ம் தேதி முதலாளி போலீஸ் பந்தோபஸ்துடன் சில கருங்காலிகளை (Black-legs) பிரஸ் உள்ளே கொண்டு போக பிரயத்தனப்பட்டார். இந்தப் பிரஸ் முதலாளி காங்கிரஸ்காரரானபடியால் இம்மாதிரியாக போலீஸ் உதவியுடன் கருங்காலிகளை உள்ளே கொண்டுபோவது தவறு என்று அவருக்கு எடுத்துக்காட்ட தொண்டர்கள் வழியில் படுத்து மறியல் செய்தனர்.

போலீஸ்காரர் தொண்டர்களை மிதித்துக்கொண்டு கருங்காலிகளை உள்ளே அழைத்துச் சென்றனர். பிறகு இரு தொண்டர்களை கைதி செய்தனர். வேலை நிறுத்தக் காலங்களில் போலீஸார் வேலை என்ன ? நடுநிலைமையாய் இருந்து பொது ஜன இடைஞ்சல் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமேயன்றி கருங்காலிகளை அழைத்துக்கொண்டு போய் முதலாளிக்கு உதவி செய்வது கண்டிக்கத் தக்கது.

இருதரப்பினரும் சமரஸத்திற்கு ஒப்புக்கொண்டு விட்டனர். ஆகவே வேலை நிறுத்தம் முடிவு பெற்றது. 25-ம் தேதி காலை முதல் தொழிலாளர் வழக்கம்போல் வேலைக்குச் சென்றனர்.

## மதுரை

மதுரா ராஜா மில் தொழிலாளர்கள் ஸ்ட்ரைக் செய்திருக்கின்றனர். அவர்கள் கோரிக்கைகளாவன :—

1. இதரமில்களில் கொடுத்து வருவது போல், இந்த மில்லில அரைநாள் வேலை செய்பவர்களுக்கு ரூ. 5-6-0 கொடுக்க வேண்டும்.

2- ரோலிங், இன்டர், டிராயிங் தொழிலாளர்களுக்கு மஹாலட்சுமி, மீனாட்சி, முதலிய மில்களில் கொடுப்பது போல் கமிஷன் கொடுக்க வேண்டும்.

3. டாபர் தொழிலாளர்களுக்கு குறைந்த பக்ஷ சம்பளம் ரூ. 12 இருக்க வேண்டும்.

4. பேமெண்ட் ஆப் வேஜஸ் ஆக்டில் குறிப்பிட்டிருப்பதற்கு அதிகப்படியாக அபராதம் போடக்கூடாது.

5. பிரசவ உதவி உடனுக்குடன் கொடுக்கப்பட வேண்டும்.

அங்கே மறியல் மிக மும்முரமாய் நடந்து வருகிறது.

## கான்பூர்

கான்பூரில் பொது வேலை நிறுத்தம் நாளுக்குநாள் பலப்பட்டு வருகிறது. சிகப்புத் தொண்டர் படை ஒன்று ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இப்படைக்கு ஒவ்வொரு மில்லும் 200 தொண்டர்களை கொடுத்திருக்கிறது. ஒவ்வொரு மில்லிலிருந்தும் பத்து பிரதிநிதிகளைக் கொண்ட பொது வேலை நிறுத்தக் கமிட்டி ஒன்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. முதலாளிகள் கருங்காலிகளை லாரிகளில் ஏற்றி மில்லுக்குள் கொண்டுபோக ஏற்பாடு செய்தனர். செந்தொண்டர்களிடம் அது பலிக்கவில்லை. தொண்டர்கள் பாதையில் படுத்து மறியல் செய்யவே அம்முயற்சி கைவிடப்பட்டது.

மொத்தம் 42 ஆயிரம் தொழிலாளர்களுக்கு மேலாக பொது வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். முதலாளிகளின் அகம்பாவத்தை கவனிக்கையில் வேலை நிறுத்தம் வெகுநாள் நீடிக்கும்போல் தெரிகிறது. கான்பூர் நகர காங்கிரஸ் கமிட்டி முதலாளிகளை அழுத்தமாகக் கண்டித்திருப்பதுடன், கான்பூர் மில் துணிகளை பகிஷ்கரிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளுகிறது. அத்துடன் ஸ்ட்ரைக் பண்டுக்கு தாராளமாக பண உதவியும் இன்னும் மற்ற உதவிகளும் செய்ய வேண்டுமென்று பொது மக்களுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறது.

மில் முதலாளிகள், விசாரணைக் கமிட்டியினுடைய சிபார்சுகளை நிராகரிப்பதன்மூலம் அந்தக் கமிட்டி அங்கத்தினர்களை அவமதிக்கின்றது. அதோடு விசாரணைக் கமிட்டிக்கு ஏற்பாடு செய்த காங்கிரஸ் கவர்ன்மெண்டை கேவலப்படுத்தி தாக்குகின்றன. இந்த அகம்பாவம் கண்டிக்கப்படவேண்டும்.

வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்ளாமல் வேலைக்குப் போகிறவர்கள் சமூக பகிஷ்காரம் செய்யப் படுகின்றனர். வேலைக்குச் செல்லுகிறவர்கள் வீடுகளில் கக்கூஸ் எடுக்காமல் செய்ய வேண்டுமென்று மத்திய ஸ்ட்ரைக் கமிட்டியார் தோட்டிகள் சங்கத்திற்கு எழுதியிருக்கின்றனர். இவ்விதமாக வேலை நிறுத்தம் மிக மும்முரமாக நடந்து வருகிறது.

## ஜாம்ஷெட்பூர்

கான்பூரில் இன்றுள்ள நிலைமையைப் போல் ஜாம்ஷெட்பூரில் ஏற்படும் போலிருக்கிறது. முக்கிய தொழிற் சாலைகளாகிய டின்ப்ளேட் கம்பெனி, இண்டியன் கேபிள் கம்பெனி, செம்பு கம்பெனிகளை தற்போது மூடப்பட்டு விட்டபடியால் ஆயிரக் கணக்கான தொழிலாளர் வேலையற்று இருக்கின்றனர்.

டாடா மில்லில் வேலை செய்யும் தொழிலாளர் முதலாளிகளுக்கு 14 நாள் ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுத்திருக்கின்றனர். டாடா தொழிலாளர்கள் எண்ணிக்கை 25,000 தொழிலாளர்கள் ஆரம்பத்தில் வேலை தாமதமாய் செய்வது; முதலாளிகள் அவர்களுடைய குறைகளை தீர்க்காவிட்டால் ஒருநாள் ஹர்த்தால் செய்வது; அப்படியும் முதலாளிகள் வணங்காவிட்டால் பொது வேலை நிறுத்தம் செய்வதென்று தீர்மானித்திருக்கின்றனர்.

முதலாளிகள் தெரிவிப்பதாவது.—1. ரஜேந்திர பிரசாத்தை தலைமையாகக் கொண்ட விசாரணைக் கமிட்டி செய்யும் சிபார்சுகளை கவனித்து செய்யப்படும். 2. 1938ம் வருடம் மார்ச்சு 31ம் தேதி லாபம் (டிவிடண்ட்) பங்கிடும்போது 2½ மாதச் சம்பளத்தை போனஸாகக் கொடுக்கபடும். 3. ஸ்ட்ரைக் செய்தால் அந்த போனஸ் கொடுக்கப்பட மாட்டாது. இதுதான் முதலாளிகள் சொல்லுவது ஏன் ? எப்படியாவது தந்திரம் செய்து தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்யாமல் செய்துவிட வேண்டுமென்பதே முதலாளிகளின் குயுக்தி. தொழிலாளிகளா ஏமாறப்போகிறவர்கள்? ஒருக்காலும் ஏமாற மாட்டார்கள்.

---

## நாகை தாலூகா விவசாயிகள் மகாநாடு

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

### விவசாயிகள் கிளர்ச்சி அவசியம்.

விவசாயிகள் கிளர்ச்சி எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக நாட்டில் நடக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு நமது மந்திரி சபையார் பண ஆதிக்கர்களிடமிருந்து வரும் எதிர்ப்புகளையும் ஏகாதிபத்யத்தின் எதிர்ப்பையும் சமாளித்து, விவசாயிகளுக்கு சாதகமான சட்டங்களை இயற்றமுடியும் என்பதை நமது மந்திரிகள் கவனிக்க வேண்டும்.

### நமது வேலை

தனித்த கிருஷிகர் ஸ்தாபனங்கள் இருக்க வேண்டியது மிக மிக அவசியம். ரயத்வாரி ஜில்லாவில் கீழ் கண்ட இரண்டு முக்கிய விஷயங்களே நமது போராட்டத்திற்கு உரியன.

(1) குறைந்த பக்ஷம் 5 ஏக்கர் சாகுபடி நிலம் 10 ஏக்கரா வரண்டபூமி உடைய வர்களிடமிருந்து வரி வசூலிப்பதை விலக்கி விட வேண்டும்.

(2) அநியாயமான எல்லா கடன்களையுமோ அல்லது விவசாயிக்கு கொடுக்க சக்தியில்லாதிருக்கும் கடன்களையுமோ தள்ளிவிட வேண்டும்.

வருடத்தில் 15 ரூபாய் வருமானத்திற்கு நமது கிராமத்திலுள்ள மக்கள் தாளம் போட்டுக்கொண்டிருக்கையில், நமது சுகாதார மந்திரி புஷ்டி பொருந்திய ஆகாரத்தைப்பற்றி அவர்களிடம் பேசி வருகிறார். இந்த வித விளையாட்டுப் பேச்சுகளால் நன்மை விளையப்போவதில்லை. உடனே விவசாயிகளுக்கு தேர்தல் விஞ்ஞாபனத்தில் கூறப்பட்டிருக்கும் வாக்குறுதிகளை நிறைவேற்றி வைக்க நமது மந்திரிகள் முன்வரவேண்டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையை ஒழிக்க காங்கிரசுடன் பர் பலமாயிருந்து போராட வி[illegible]ள் என்றும் தயாரா[illegible] ளேன்று கூறுகிறே[illegible]

JANA SHAKTI

# ஜனசக்தி

(சனிக்கிழமைதோறும் வெளிவரும்)

கிருஷிகர் உலகம்

## சமஷ்டியை எதிர்த்துப் போராட தயாராகுங்கள்

## எல்லா ராஜீயக் கைதிகளையும் விடுதலை செய்க

## அடக்குமுறைச் சட்டம் ஒழிக

### கோமில்லா தீர்மானங்கள்

அகில இந்திய கிருஷிகர் மகாநாட்டில், குறிப்பாக கிருஷிகர்கள் சம்பந்தமாகவும் பொதுவாக நமது நாட்டைப்பற்றியும் பல தீர்மானங்கள் நிறைவேறியுள்ளன.

கோமில்லா மகாநாடு சம்பந்தமாக சுற்றுப்பிரயாணம் செய்து வந்த சட்டசபை மெம்பர் (தொழிலாளர் பிரதிநிதி) தோழர் டட்முஸாம்தாரை கைது செய்துவழக்கு தொடுத்ததற்காக, வங்காள சர்க்காரை இம்மகாநாடு வன்மையாகக்கண்டிக்கிறது. ஜமீன்தாரி முறை அடியோடு ஒழிய வேண்டுமென்றும், விவசாயிகள், குத்தகைதார்கள்., விவசாய தொழிலாளர்கள் அனைவரும் பட்டிருக்கும் மொத்த கடன்களையும் அடியோடு தள்ளுபடி செய்யவேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. அஸ்ஸாமிலும் வங்காளத்திலும் நிலவியுள்ள 'டொக்கர்' முறையை ஒழிக்க வேண்டுமென்று இம்மகாநாடு கோருகிறது.

"நடந்த விஷயங்களைக் கண்டு கொள்ளாமலும், கிருஷிகர் சபை அங்கீகரித்த பொறுப்பு வாய்ந்த தலைவர்களை நம்பாமலும் "காந்திஜீ கிருஷிகர் சபை மீதும், அதன் நடவடிக்கை மீதும் குற்றம் கூறியதைக் கண்டு இம்மகாநாடு தன் வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறது. கிருஷிகர் நியாயமான கோரிக்கைகளை அமுலுக்குக் கொண்டுவர கிருஷிகர்கள் அவர்களுடைய கிளர்ச்சிகளை தொடர்ந்து நடத்த வேண்டு மென்று இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

பெடரேஷனை எதிர்த்து போராட உறுதியுடன் இருப்பதாகவும், வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டுரிமை அளித்து சுய நிர்ணய சபை கூட்டவேண்டியதின் அவசியத்தைக் குறித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

### கிருஷிகர் சபை மெம்பர்கள்

| மாகாணம் | மெம்பர்கள் |
|---|---|
| பீகார் | 2,50,000 |
| பஞ்சாப் | 73,000 |
| ஆந்திரா | 53,000 |
| வங்காளம் | 34,000 |
| அஸ்ஸாம் | 15,000 |
| உத்கல் | 14,000 |
| ஐக்கியமாகாணம் | 60,000 |
| குஜராத் | 2,500 |
| மகராஷ்டிரா | 1,300 |
| மத்திய மாகாணம் | 4,000 |
| மொத்தம் | 506800 |

### லபக்கர்கஞ் ஜில்லா விவசாயிகள் மகாநாடு

வங்காள மாகாணத்திலுள்ள லபக்கர்கஞ் ஜில்லா விவசாயிகள் மகாநாடு தோழர் முஸாபர் அகமத் தலைமையின் கீழ் சான்சிபில் சமீபத்தில் கூடிய மகாநாட்டில் கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறி யுள்ளன.

விளை பொருள்களின் விலை குறைந்து போவதற்கு எதிராக சரியான வசதி செய்யப்பட வேண்டு மென்றும், விவசாயிகளுக்கு அவசியமாய் பிரதிதின உபயோகத்திலுள்ள பொருள்களுக்கு வரி தள்ளப்பட வேண்டு மென்றும், மூன்றுவது வகுப்பு ரயில்-ஸ்டீமர் கட்டணம் குறைக்கப்பட வேண்டு மென்றும் இம் மகாநாடு கோருகிறது.

லேவாதேவிக்காரர்கள் இம்சையிலிருந்து மீள, விவசாயிகள் பாங்குகள் ஏற்படுத்தி, குறைந்த வட்டியில் விவசாயிகளுக்கு கடன் கொடுத்து உதவ வேண்டும்.

எந்தவித கல்வி வரியும் விதிக்காமல், இலவச ஆரம்பக் கல்வியை உடனே அமுலுக்குக் கொண்டு வர வேண்டும்.

நிலவரியும், ரோட்டு குத்தகையும் குறைக்கப்பட வேண்டும். இலாபமற்ற நிலத்திற்கு எந்த வித வரியும் வாடகையும் வாங்கக் கூடாது. அதோடு தரிசாகக் கிடக்கும் நிலத்தை சர்க்கார் எந்தவித நிலச்சுவான் வாடகையுமின்றி விவசாயிகளுக்கு கொடுத்து உதவ வேண்டும்.

சணல் விலை குறைந்தது மணங்கு ரூ. 10 ஆக ஏற்படுத்த வேண்டு மென்றும், விற்பனையாகாமல் இருக்கும் சணலை சர்க்காரே வாங்கிக் கொள்ள வேண்டு மென்று இம்மகாநாடு சர்க்காரை வற்புறுத்துகிறது.

காஸ்மஹால் பிராந்தியங்களில், பழைய பாக்கி வாடகை வசூல் செய்ய கையாண்ட அடக்குமுறைகளை இம்மகாநாடு வன்மையாகக் கண்டிப்பதுடன், அந்த பிராந்தியங்களில் வாடகை வசூலிப்பதை உடனே தள்ளி வைக்க வேண்டுமென்றும் குறிப்பிட்ட காலத்தில் பழைய வாடகை பாக்கி கொடுக்காததற்காகவும், கடனை குறித்த தவணையில் கொடுக்காததற்காகவும் ஏலம் போடப்பட்ட நிலங்களை உடனே விவசாயிகளுக்கு திரும்ப கொடுத்தாகவேண்டுமென்று சர்க்காரை கேட்டுக்கொள்கிறது.

பெடரேஷனை எதிர்த்து பலத்த கிளர்ச்சிகள் காங்கிரஸ் கொடியின் கீழிருந்து ஏகாதிபத்திய எதிரிகள் அனைவரும் செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

தோழர்கள் டட்முஸாம்தார், ஆனந்த முக்கர்ஜி இருவரும், கோமில்லாவில் கூடிய அகில இந்திய கிருஷிகர்கள் மகாநாட்டிற்கு போய்க் கொண்டிருக்கும் போது, கைது செய்யப்பட்டு தண்டிக்கப் பட்டதற்காக இந்த மகாநாடு வங்காள மந்திரி சபை நடத்தையை அங்கீகரிக்கவில்லை என்பதோடு, உடனே அவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று இம் மகாநாடு கோருகிறது. எந்த வித விசாரணையுமின்றி காவலில் வைக்கப்பட்டிருக்கும் தோழர்கள் அப்துல் ஹலீம், கோஸ்ஸ்வாமி சரோஜ் முக்காஜி முதலியவர்களை, எந்தவித விசாரணையையும் நடத்தாமல், உடனே விடுதலை செய்ய வேண்டுமென்று மந்திரி சபையை இம் மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

அடக்குமுறைச் சட்டங்களை எல்லாம் ரத்து செய்யவேண்டும் அரசியல் கைதிகள் அனைவரையும் விடுதலை செய்யவேண்டும் என்று இம்மகாநாடு கோருகிறது.

இந்த ஜில்லாவில் கிராம சங்கங்களை ஏற்படுத்தி ஜில்லா சங்கத்தை பலப்படுத்த வேண்டு மென்று இந்த ஜில்லா விவசாயிகளையும் தொழிலாளர்களையும் இந்த மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

---

Printed by R. Balan at Jesu Press, Edited and Published by P. Jeevanandan,
270, Triplicane High Road, Madras.